ஸ்ரீ 

பிள்ளைலோகாசார்யர்

திருவாய்மலர்ந்தருளின

# முமுக்ஷுப்படியும்,

மணவாளமாமுனிகள் அருளிச்செய்த

# திருமந்த்ரார்த்தம்

என்கிற

வ்யாக்யானமும்,

அரும்பதவுரை, ப்ரமாணத்திரட்டு இவைகளுடன்



சே. கிருஷ்ணமாசாரியரால்

திருவல்லிக்கேணி

ஸக்ஸஸ் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டன.

---

துந்துபி௵ 1923 ரூபா 1—8—0

    

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ரஹஸ்யங்களைத்

# தொடங்கும்போது அநுஸந்திக்கும் தனியன்கள்.

## பொதுத்தனியன்கள்.

(அழகியமணவாளன் அருளிச்செய்தது.)

𑌶𑍍𑌰𑍀𑌶𑍈𑌲𑍇𑌶𑌦𑌯𑌾𑌪𑌾𑌤𑍍𑌰𑌂 𑌧𑍀𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌗𑌣𑌾𑌰𑍍𑌣𑌵𑌮𑍍 ।
𑌯𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌪𑍍𑌰𑌵𑌣𑌂𑌵𑌨𑍍𑌦𑍇 𑌰𑌮𑍍𑌯𑌜𑌾𑌮𑌾𑌤𑌰𑌂𑌮𑍁𑌨𑌿𑌮𑍍 ॥

[ஸ்ரீசைலேசதயாபாத்ரம் தீபக்த்யாதிகுணார்ணவம் |
யதீந்த்ரப்ரவணம்வந்தே ரம்யஜாமாதரம்முநிம்.]

(ஆழ்வான் அருளிச்செய்தது.)

𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌨𑌾𑌥𑌸𑌮𑌾𑌰𑌮𑍍𑌭𑌾𑌂 𑌨𑌾𑌥𑌯𑌾𑌮𑍁𑌨𑌮𑌧𑍍𑌯𑌮𑌾𑌮𑍍 ।
𑌅𑌸𑍍𑌮𑌦𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌪𑌰𑍍𑌯𑌨𑍍𑌤𑌾𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌗𑍁𑌰𑍁𑌪𑌰𑌮𑍍𑌪𑌰𑌾𑌮𑍍 ॥

[லக்ஷ்மீநாதஸமாரம்பாம் நாதயாமுநமத்யமாம் |
அஸ்மதாசார்யபர்யந்தாம் வந்தேகுருபரம்பராம்.]

(இதுவும் ஆழ்வான் அருளிச்செய்தது.)

𑌯𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌚𑍍𑌯𑍁𑌤𑌪𑌦𑌾𑌮𑍍𑌬𑍁𑌜𑌯𑍁𑌗𑍍𑌮𑌰𑍁𑌕𑍍𑌮
𑌵𑍍𑌯𑌾𑌮𑍋𑌹𑌤𑌸𑍍𑌤𑌦𑌿𑌤𑌰𑌾𑌣𑌿 𑌤𑍃𑌣𑌾𑌯 𑌮𑍇𑌨𑍇 ।
𑌅𑌸𑍍𑌮𑌦𑍍𑌗𑍁𑌰𑍋𑌰𑍍𑌭𑌗𑌵𑌤𑍋𑌽𑌸𑍍𑌯 𑌦𑌯𑍈𑌕𑌸𑌿𑌨𑍍𑌧𑍋𑌃
𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌸𑍍𑌯 𑌚𑌰𑌣𑍌 𑌶𑌰𑌣𑌂 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑍇 ॥

[யோநித்யமச்யுதபதாம்புஜயுக்மருக்ம
வ்யாமோஹதஸ்ததிதராணித்ருணாயமேநே |
அஸ்மத்குரோர்பகவதோஸ்யதயைகஸிந்தோ:
ராமாநுஜஸ்யசரணௌஶரணம்ப்ரபத்யே]

(ஆளவந்தார் அருளிச்செய்தது.)

𑌮𑌾𑌤𑌾 𑌪𑌿𑌤𑌾 𑌯𑍁𑌵𑌤𑌯𑌸𑍍𑌤𑌨𑌯𑌾 𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌃
𑌸𑌰𑍍𑌵𑌂𑌯𑌦𑍇𑌵𑌨𑌿𑌯𑌮𑍇𑌨 𑌮𑌦𑌨𑍍𑌵𑌯𑌾𑌨𑌾𑌮𑍍 ।

𑌆𑌦𑍍𑌯𑌸𑍍𑌯 𑌨𑌃 𑌕𑍁𑌲𑌪𑌤𑍇𑌰𑍍𑌵𑌕𑍁𑌲𑌾𑌭𑌿𑌰𑌾𑌮𑌂
𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍍𑌤𑌦𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌯𑍁𑌗𑌲𑌂 𑌪𑍍𑌰𑌣𑌮𑌾𑌮𑌿 𑌮𑍂𑌰𑍍𑌧𑍍𑌨𑌾 ॥

[மாதாபிதா யுவதயஸ் தநயாவிபூதிஸ்
ஸர்வம்யதேவ நியமேந மதந்வயாநாம் |
ஆத்யஸ்யநः குலபதேர் வகுலாபிராமம்
ஸ்ரீமத்ததங்க்ரியுகலம் ப்ரணமாமிமூர்த்நா.]

(பட்டர் அருளிச்செய்தது.)

𑌭𑍂𑌤𑌂 *𑌸𑌰𑌸𑍍𑌯 𑌮𑌹𑌦𑌾𑌹𑍍𑌵𑌯 𑌭𑌟𑍍𑌟𑌨𑌾𑌥
𑌶𑍍𑌰𑍀𑌭𑌕𑍍𑌤𑌿𑌸𑌾𑌰𑌕𑍁𑌲𑌶𑍇𑌖𑌰 𑌯𑍋𑌗𑌿𑌵𑌾𑌹𑌾𑌨𑍍 ।
𑌭𑌕𑍍𑌤𑌾𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌰𑍇𑌣𑍁𑌪𑌰𑌕𑌾𑌲𑌯𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌿𑌶𑍍𑌰𑌾𑌨𑍍
𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍍𑌪𑌰𑌾𑌙𑍍𑌕𑍁𑌶𑌮𑍁𑌨𑌿𑌂 𑌪𑍍𑌰𑌣𑌤𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑍍 ॥

[பூதம்ஸரஸ்யமஹதாஹ்வய பட்டநாத
ஸ்ரீபக்திஸாரகுலஶேகர யோகிவாஹாந் |
பக்தாங்க்ரிரேணுபரகால யதீந்த்ரமிஶ்ராந்
ஸ்ரீமத்பராங்குஶமுநிம் ப்ரணதோஸ்மிநித்யம்.]

—o∘∘—

**ரஹஸ்யார்த்த ஸம்ப்ரதாயபரம்பரையின் ஓட்டுத்தனியன்.**

𑌲𑍋𑌕𑌗𑍁𑌰𑍁𑌂 𑌗𑍁𑌰𑍁𑌭𑌿𑌃 𑌸𑌹 𑌪𑍂𑌰𑍍𑌵𑍈𑌃 𑌕𑍂𑌰𑌕𑍁𑌲𑍋𑌤𑍍𑌤𑌮𑌦𑌾𑌸𑌮𑍁𑌦𑌾𑌰𑌮𑍍 । 𑌶𑍍𑌰𑍀𑌨𑌗𑌪𑌤𑍍𑌯𑌭𑌿𑌰𑌾𑌮𑌵𑌰𑍇𑌶𑍌 𑌦𑍀𑌪𑍍𑌰𑌶𑌯𑌾𑌨𑌗𑍁𑌰𑍂𑌂𑌶𑍍𑌚 𑌭𑌜𑍇𑌽𑌹𑌮𑍍 ॥

[லோககுரும் குருபிஸ்ஸஹபூர்வை: கூரகுலோத்தமதாஸமுதாரம்
ஸ்ரீநகபத்யபிராமவரேஶௌ தீப்ரஶயாநகுரூஞ்சபஜேஹம்]

**பூர்வோக்தகுருபரம்பரைக்கு ப்ரத்யேக தனியன்கள்.**

(ஈயுண்ணி பத்மநாபர் அருளிச்செய்தது.)

𑌲𑍋𑌕𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌾𑌯 𑌗𑍁𑌰𑌵𑍇 𑌕𑍃𑌷𑍍𑌣𑌪𑌾𑌦𑌸𑍍𑌯 𑌸𑍂𑌨𑌵𑍇 ।
𑌸𑌂𑌸𑌾𑌰𑌭𑍋𑌗𑌿𑌸𑌨𑍍𑌦𑌷𑍍𑌟𑌜𑍀𑌵𑌜𑍀𑌵𑌾𑌤𑌵𑍇 𑌨𑌮𑌃 ॥

[லோகாசார்யாயகுரவே க்ருஷ்ணபாதஸ்யஸூநவே |
ஸம்ஸாரபோகிஸந்தஷ்ட ஜீவஜீவாதவேநம:]

---

* '𑌸𑌰𑌶𑍍𑌚' என்று பாடாந்தரம்.

திருவாய்மொழிப்பிள்ளை அருளிச்செய்த

கூரகுலோத்தமதாஸர் தனியன்.

𑌲𑍋𑌕𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌕𑍃𑌪𑌾𑌪𑌾𑌤𑍍𑌰𑌂 𑌕𑍌𑌣𑍍𑌡𑌿𑌨𑍍𑌯𑌕𑍁𑌲𑌭𑍂𑌷𑌣𑌮𑍍 ॥
𑌸𑌮𑌸𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌗𑍁𑌣𑌾𑌵𑌾𑌸𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌕𑍂𑌰𑌕𑍁𑌲𑍋𑌤𑍍𑌤𑌮𑌮𑍍 ।

[லோகாசார்யக்ருபாபாத்ரம் கௌண்டிந்யகுலபூஷணம் ।
ஸமஸ்தாத்மகுணாவாஸம் வந்தே கூரகுலோத்தமம் ॥]

மணவாளமாமுனிகள் அருளிச்செய்த

திருவாய்மொழிப்பிள்ளை தனியன்.

𑌨𑌮𑌃 𑌶𑍍𑌰𑍀𑌶𑍈𑌲𑌨𑌾𑌥𑌾𑌯 𑌕𑍁𑌨𑍍𑌤𑍀𑌨𑌗𑌰𑌜𑌨𑍍𑌮𑌨𑍇 ।
𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌲𑌬𑍍𑌧𑌪𑌰𑌮𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌕𑍈𑌙𑍍𑌕𑌰𑍍𑌯𑌶𑌾𑌲𑌿𑌨𑍇 ॥

[நமஶ்ஶ்ரீசைலநாதாய குந்தீநகரஜந்மநே ।
ப்ரஸாதலப்தபரம ப்ராப்ய கைங்கர்யஶாலிநே ॥]

மணவாளமாமுனிகளுக்கு மாதாமஹரான

கோட்டூரழகியமணவாளப்பெருமாள்பிள்ளை தனியன்.

𑌲𑍋𑌕𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌪𑌦𑌾𑌮𑍍𑌭𑍋𑌜𑌰𑌾𑌜𑌹𑌂𑌸𑌾𑌯𑌿𑌤𑌾𑌨𑍍𑌤𑌰𑌮𑍍 ।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌜𑌲𑌧𑌿𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌸𑍌𑌮𑍍𑌯𑌵𑌰𑌂 𑌗𑍁𑌰𑍁𑌮𑍍 ॥

[லோகாசார்ய பதாம்போஜ ராஜஹம்ஸாயிதாந்தரம் ।
ஜ்ஞாநவைராக்யஜலதிம் வந்தேஸௌம்யவரம்குரும் ॥]

மணவாளமாமுனிகள் அருளிச்செய்த

திகழக்கிடந்தான் திருநாவீறுடையபிரான் தாதரண்ணரையர் தனி

𑌶𑍍𑌰𑍀𑌜𑌿𑌹𑍍𑌵𑌾𑌵𑌦𑌦𑍀𑌶𑌦𑌾𑌸𑌮𑌮𑌲𑌮𑌶𑍇𑌷𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌦𑌂 ।
𑌸𑍁𑌨𑍍𑌦𑌰𑌵𑌰𑌗𑍁𑌰𑌕𑌰𑍁𑌣𑌾𑌕𑌨𑍍𑌦𑌲𑌿𑌤𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌨𑍍𑌦𑌿𑌰𑌂 ... 𑌯𑍇 ॥

[ஸ்ரீஜிஹ்வாவததீஶதாஸமமல மஶேஷஶாஸ்த்ரவிதம்
ஸுந்தரவரகுருகருணைகந்தளித ஜ்ஞாநமந்திரம் ... யே ]

ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம் ।
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம் ॥ *

---

## சாற்றும்போது அநுஸந்திக்கும் தனியன்கள்

(வானமாமலைசீயர் அருளிச்செய்தது.)

கோதிலுலகாசிரியன் கூரகுலோத்தமதாதர்
தீதில்திருமலையாழ்வார் செழுங்குரவைமணவாளர்
ஓதரியபுகழ்த்திருநாவீறுடையபிரான்தாதருடன்
போதமணவாளமுனிபொன்னடிகள்போற்றுவனே.

வாழியுலகாசிரியன் வாழியவன்மன்னுகுலம்
வாழிமுடும்பையென்னுமாநகரம்—வாழி
மனஞ்சூழ்ந்தபேரின்பமல்குமிகுநல்லா
ரினஞ்சூழ்ந்திருக்குமிருப்பு.

ஓதுமுடும்பையுலகாசிரியனரு
ளேதுமறவாதவெம்பெருமான்—†நீதி
வழுவாச்சிறுநல்லூர் மாமறையோன்பாதந்
தொழுவார்க்குவாராதுயர்.

இதன்பிறகு "நமஸ்ரீசைல" என்று தொடங்கி ஸ்வாசார்ய பரம்பரைத் தனியன்களை முன்போல் அநுஸந்தித்து முடிக்கவேண்டும்.

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.

சீயர் திருவடிகளே ஶரணம்.

---

* இதன்பிறகு ஸ்வாசார்யபரம்பரைத் தனியன்களை அநுஸந்திக்க வேண்டும்.

† ‘நீதி [illegible] ழி’ என்ற பாடம் தளைதட்டும்.

# இப்புத்தகத்தில் அடங்கியவை.





* இந்த ப்ரமாணத்திரட்டும், அரும்பதவுரையும் - நமது வை.மு. கோபால கிருஷ்ணமாசாரியரால் எழுதிச் சேர்க்கப்பட்டன.



# முமுக்ஷுப்படியின் வ்யாக்யாநம்

## அவதாரிகை.

ஸ்ரீயஃபதியாய் ஸ்ரீவைகுண்டநிகேதநனாய் நித்யமுக்தாநுபாவ்யனாய் நிரதிஶயாநந்தயுக்தனாயிருக்கிற ஸர்வேஶ்வரன், அந்த நித்யஸூரிகளோபாதி தன்னை யநுபவித்து நித்யகைங்கர்யபரராய் வாழுகைக்கு ப்ராப்தியுண்டாயிருக்கச்செய்தேயும் அத்தை யிழந்து (௧) "அஸந்நேவ" [அஸந்நேவ] என்கிறபடியே அஸத்கல்பராய்க்கிடக்கிற ஸம்ஸாரிசேதநருடைய இழவை அநுஸந்தித்து, அத்யந்தவ்யாகுலசித்தனாய், இவர்கள் கரணகளேபரங்களை யிழந்து இறகொடிந்தபக்ஷி போலே கிடக்கிற தஶையிலே கரணாதிகளைக்கொடுத்து, அவற்றைக்கொண்டு [1] வ்யபிசரியாதே தன்னையாஶ்ரயித்து உஜ்ஜீவிக்கைக்கு உடலாக, அபௌருஷேயமாய் நித்யநிர்தோஷமாய் ஸ்வதஃப்ரமாணமான வேதத்தையும் ததுபப்ரும்ஹணங்களான ஸ்ம்ருதி இதிஹாஸ புராணாதிகளையும் ப்ரவர்த்திப்பித்தவிடத்திலும் அந்த ஶாஸ்த்ராப்யாஸத்துக்கு அநேகயோக்யதை வேண்டுகையாலே அவ்வழியாலே ஜ்ஞாநம்பிறந்து சேதநர் உஜ்ஜீவிக்கை அரிதாயிருக்கிறபடியைத் திருவுள்ளம்பற்றி, ஸகல ஶாஸ்த்ர தாத்பர்யங்களையும் ஸங்க்ரஹமாக இவர்கள் அறியலாம்படி பண்ணவேணுமென்று, ஸ்வரூபோபாயபுருஷார்த்த [2] யாதாத்ம்ய ப்ரதிபாதகமான ரஹஸ்யத்ரயத்தையும், ஸ்வயமேவ ஆசார்யனாய்நின்று ப்ரகாஶிப்பித்தருளினான்.

அதில், திருமந்த்ரத்தை ஸ்ரீபதரிகாஶ்ரமத்திலே ஸ்வாம்ஶபூதனான நரன்விஷயமாக ப்ரகாஶிப்பித்தான். த்வயத்தை ஸ்ரீவிஷ்ணுலோகத்திலே ஸ்வமஹிஷியான பிராட்டி விஷயமாக ப்ரகாஶிப்பித்தான். சரமஶ்லோகத்தைத் திருத்தேர்த்தட்டிலே ஸ்வாஶ்ரிதனான அர்ஜுநன்விஷயமாக ப்ரகாஶிப்பித்தான். ஆகையாலிறே, (௨) "லக்ஷ்மீநாதஸமாரம்பாம்" [லக்ஷ்மீநாதஸமாரம்பாம்] என்று குருபரம்பராதியிலே ஈஶ்வரனை யநுஸந்திக்கிறது.

---

1. வ்யபிசரித்தல்—கண்டபடி திரிதல்.
2. யாதாத்ம்யப்ரதிபாதகம்-உண்மையான தன்மையை ப்ரதிபாதிப்பது.

இனி இந்த ரஹஸ்யத்ரயந்தான், ஶப்தம் ஸங்க்ரஹமாயிருந்ததேயாகிலும் அர்த்தம் உபதேஶகம்யமாகையாலும், அதறிந்தே எல்லார்க்கும் உஜ்ஜீவிக்க வேண்டுகையாலும், அந்த ரஹஸ்யத்ரயத்திலும் பூர்வாசார்யர்களுடைய உபதேஶபரம்பராப்ராப்தமான அர்த்தவிஶேஷங்களை ஸர்வர்க்கும் ஸங்க்ரஹமாகவும் ஸுவ்யக்தமாகவும் பிள்ளைலோகாசார்யர் தம்முடைய பரமக்ருபையாலே இப்ரபந்தமுகேந அருளிச்செய்கிறார். முன்பே ரஹஸ்யத்ரயவிஷயமாக மூன்றுப்ரபந்தம் இட்டருளியிருக்கச்செய்தேயும், அதில் யாத்ருச்சிகப்படி அதிஸங்க்ரஹமாகையாலும், பரந்தபடி அதிவிஸ்த்ருதமாகையாலும், ஶ்ரியஃபதிப்படி உபயதோஷமுமின்றிக்கே இருந்ததேயாகிலும் ஸம்ஸ்க்ருதவாக்யபஹுளமாகையாலே பெண்ணுக்கும் பேதைக்கும் அதிகரிக்கப்போகாமையாலும், த்ரிவிததோஷமுமில்லாதபடி இன்னமும் ஒரு ப்ரபந்தமிடவேணுமென்று திருவுள்ளம்பற்றி எல்லாவற்றுக்கும் பின்பிறே முமுக்ஷுப்படியாகிற இப்ரபந்தம் இட்டருளிற்று.

ஆகையிறே, அல்லாத ப்ரபந்தங்கள் கிடக்க, இத்தை எல்லாரும் அதிகரித்துப்போருகிறது. இன்னமும் பூர்வப்ரபந்தங்களில் அநுக்தமான அர்த்தவிஶேஷங்களும் இப்ரபந்தத்திலே உண்டாகையாலும், இதுவே எல்லார்க்கும் ஆதரணீயமாயிருக்கும்.

வ்யாக்யாந அவதாரிகை முற்றிற்று.

—o—

# முமுக்ஷுப்படி

## திருமந்த்ரப்ரகரணம்.

---

மூலம்:—

**(க) முமுக்ஷுவுக்கு அறியவேண்டும் ரஹஸ்யம் மூன்று.**

வ்யாக்யாநம்:-(முமுக்ஷுவுக்கு அறியவேண்டும் ரஹஸ்யம் மூன்று.) முமுக்ஷுவாகிறான் மோக்ஷத்திலே இச்சையுடையனானவன். *“முச்ல் மோக்ஷணே” [முச்ல் மோக்ஷணே] யிறே தாது; இத்தால், ஸம்ஸார விமோசநத்தில் இச்சைபிறந்தவனுக்கு என்றபடி. ஆத்மப்ராப்தி காமனுக்கும் முமுக்ஷுத்வமுண்டேயாகிலும், இவ்விடத்தில் அவன் விவக்ஷிதனன்று. அவனுக்கு ரஹஸ்யத்ரயஜ்ஞாநாபேக்ஷை யில்லை யிறே. ஆகையால், இவர் முமுக்ஷுவென்கிறது, [1] பகவத்ப்ராப்தி காமதயா ஸம்ஸார நிவ்ருத்தியில் இச்சைபிறந்தவனை. [2] ஏவம்பூதனானவனுக்கு ‘அறியவேண்டும் ரஹஸ்யம் மூன்று’ என்றது—இவனுக்கு அவஶ்யம் ஜ்ஞாதவ்யமாயுள்ளது ஸ்வரூப உபாய புருஷார்த்தங்களாகையாலும், அவற்றை இந்த ரஹஸ்யத்ரயம் உள்ளபடி ப்ரதிபாதிக்கையாலும், ரஹஸ்யத்ரயமுமே அறியவேண்டுவதென்கை. (௩) “ஸ்வஜ்ஞாநம் ப்ராபகஜ்ஞாநம் ப்ராப்யஜ்ஞாநம் முமுக்ஷுபி: । ஜ்ஞாநத்ரயமுபாதேயம் ஏதத³ந்யந்ந கிஞ்சந” [ஸ்வஜ்ஞாநம் ப்ராபகஜ்ஞாநம் ப்ராப்யஜ்ஞாநம் முமுக்ஷுபி:—ஜ்ஞாநத்ரயமுபாதேயம் ஏததந்யந்நகிஞ்சந] என்னக்கடவதிறே. ‘ரஹஸ்யம் மூன்று’ என்று இவர் உத்தேஶிக்கிறது-திருமந்த்ரமும் த்வயமும் சரமஶ்லோகமுமாகிற இவற்றை யென்னுமிடம், மேலே ஸுஸ்பஷ்டம். இவற்றை ரஹஸ்யங்க

---

* ஶப்-வி-துதாதி.

1. பகவத்ப்ராப்திகாமதயா-எம்பெருமானைப் போய்ச் சேர்வதில் விருப்பமுடையவனாயிருத்தலாலே.

2. ஏவம்பூதன்-இப்படிப்பட்டவன்.

ளென்கிறது. ஸகலவேதாந்த ஸாரார்த்த 1. ப்ரதிபாதகதயா 2. பரமகுஹ்யங்களாகையாலே. ஆக, இவ்வாக்யத்தால், அதிகாரி நிர்தேஶமும் தத் 3. ஜ்ஞாதவ்ய நிர்தேஶமும் பண்ணியருளினாராய்த்து.

இனி, அந்த ரஹஸ்யத்ரயத்திலும் ப்ரதமரஹஸ்யமேதென்னும் ஆகாங்க்ஷையிலே அருளிச்செய்கிறார்

## ஸூ (௨) அதில் ப்ரதமரஹஸ்யம்-திருமந்த்ரம்.

(வ்யா) ‘அதில் ப்ரதமரஹஸ்யம் திருமந்த்ரம்’ என்று; அதாவது-அந்த ரஹஸ்யத்ரயத்திலும் வைத்துக்கொண்டு, இவ்வதிகாரிக்கு ப்ரதமம் ஜ்ஞாதவ்யமான ரஹஸ்யம், ஸ்வரூபயாதாத்ம்யபரமாய் த்யாஜ்யோபாதேயவிபாகஜ்ஞாநத்தைப் பரிபூர்ணமாகப் பிறப்பிக்குமதான திருமந்த்ரமென்கை. அநந்யார்ஹஶேஷத்வம் அநந்யஶரணத்வம் அநந்யபோக்யத்வமாகிற ஆகாரத்ரயத்தையும் ப்ரதிபாதிக்கையாலே சேதநஸ்வரூப யாதாத்ம்ய ப்ரதிபாதநபரமாய், ததநுகுணமான த்யாஜ்ய உபாதேயவிபாகத்தையும் ஸுஸ்பஷ்டமாக ப்ரதிபாதியாநின்றுள்ள இம்மந்த்ரத்தாலே ஸுஶிக்ஷிதமான ஸ்வரூபத்தையுடையவனுக்கிறே, மற்றை ரஹஸ்யங்களிரண்டாலும் ப்ரதிபாதிக்கப்படுகிற உபாயோபேயங்களில் அபேக்ஷை ஜநிப்பது. ஆகையால், ஸ்வரூபயாதாத்ம்யபரமான திருமந்த்ரம், ப்ரதமரஹஸ்யமெனக் குறையில்லை. இன்னமும், ப்ரணவத்துக்கு மந்த்ரஶேஷம் விவரணமானாற்போலே மந்த்ரஶேஷத்துக்கு த்வயம் விவரணமாய், த்வயத்துக்குச் சரமஶ்லோகம் விவரணமாயிறே இருப்பது. அந்த ந்யாயத்தாலும், இதினுடைய 4. ப்ராதம்யம் ஸித்தமிறே. ஆக, இவையெல்லாவற்றையும் திருவுள்ளம் பற்றியாய்த்து, ‘ப்ரதமரஹஸ்யம் திருமந்த்ரம்’ என்று இவர் அருளிச்செய்தது. இத்தை மந்த்ரமென்கிறது-(௪) “𑌮𑌨𑍍𑌤𑌾𑌰𑌂 𑌤𑍍𑌰𑌾𑌯𑌤 𑌇𑌤𑌿 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌃” [மந்தாரம் த்ராயத இதி, மந்த்ர:] என்கிறபடியே ஶப்தஶக்தியாலும் அர்த்தபோதநத்தாலும்

1. ப்ரதிபாதகதயா-ப்ரதிபாதிப்பதாக இருப்பதால்.

2. பரமகுஹ்யங்கள்-அந்யர்காதில் படாதபடி மிகவும் மறைக்கக் கூடியவை.

3. ஜ்ஞாதவ்யம்-அறியத்தகுந்தது.

4. ப்ராதம்யம்-முதன்மை.

தன்னை யநுஸந்திப்பார்க்கு ரக்ஷகமாகையாலே. ஶப்தஶக்தியாலே ரக்ஷகமாம், ஜபஹோமாதிகளாலே கார்யங்கொள்ளும் உபாஸகர்க்கு. அர்த்தபோதநத்தாலே ரக்ஷகமாம், ஈஶ்வரனே உபாயோபேயமென்றிருக்கும் ப்ரபந்நர்க்கு. அர்த்தபோதநத்தாலே ரக்ஷகமாகையாவது-(௫) “𑌦𑍇𑌹𑌾𑌸𑌕𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌯𑌦𑌿 𑌭𑌵𑌤𑌿 𑌪𑌦𑌂 𑌸𑌾𑌧𑍁 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌤𑍍𑌤𑍃𑌤𑍀𑌯𑌂 𑌸𑍍𑌵𑌾𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑍍𑌯𑌾𑌨𑍍𑌧𑍋 𑌯𑌦𑌿 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌥𑌮𑌮𑌿𑌤𑌰𑌶𑍇𑌷𑌤𑍍𑌵𑌧𑍀𑌶𑍍𑌚𑍇𑌦𑍍𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌮𑍍 । 𑌆𑌤𑍍𑌮𑌤𑍍𑌰𑌾𑌣𑍋𑌨𑍍𑌮𑍁𑌖𑌶𑍍𑌚𑍇𑌨𑍍𑌨𑌮 𑌇𑌤𑌿 𑌚 𑌪𑌦𑌂 𑌬𑌾𑌨𑍍𑌧𑌵𑌾𑌭𑌾𑌸𑌲𑍋𑌲𑌃 𑌶𑌬𑍍𑌦𑌂 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌾𑌖𑍍𑌯𑌂 𑌵𑌿𑌷𑌯𑌚𑌪𑌲𑌧𑍀𑌶𑍍𑌚𑍇𑌚𑍍𑌚𑌤𑍁𑌰𑍍𑌥𑍀𑌂 𑌪𑍍𑌰𑌪𑌨𑍍𑌨𑌃” [தேஹாஸக்தாத்மபுத்திர்யதிபவதிபதம்ஸாதுவித்யாத்த்ருதீயம் ஸ்வாதந்த்ர்யாந்தோயதிஸ்யாத்ப்ரதமம் இதரசேஷத்வதீஸ்சேத்த்விதீயம்-ஆத்மத்ராணோந்முகஸ்சேந்நமஇதிசபதம்பாந்தவாபாஸலோலஶ் ஶப்தம் நாராயணாக்யம் விஷயசபலதீஸ்சேந் சதுர்த்தீம் ப்ரபந்ந:] என்று பட்டர் அருளிச்செய்தபடியே தன்னை அநுஸந்திப்பார்க்கு தேஹாத்மாபிமாநமும், ஸ்வாதந்த்ர்யமும், அந்யஶேஷத்வமும், ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயமும், அபந்துஸங்கமும், விஷயப்ராவண்யமும் மேலிடாதபடிபண்ணி ஸ்வரூபாநுரூபமாக நடக்கும்படி நோக்குகை.

இனிமேல் இம்மந்த்ரத்தினுடைய வைபவத்தை விஸ்தரேண ப்ரதிபாதிப்பதாகத் திருவுள்ளம்பற்றி, ப்ரதமம் இதனுடைய அநுஸந்தாநக்ரமகதநமுகத்தாலே இதன்வைபவத்தை அருளிச்செய்கிறார்

**மூ.-(௩) திருமந்த்ரத்தினுடைய சீர்மைக்குப் போரும்படி ப்ரேமத்தோடே பேணியநுஸந்திக்கவேணும்.**

(வ்யா.) ‘திருமந்த்ரத்தினுடைய’ என்று தொடங்கி. திருமந்த்ரத்துக்குச்சீர்மையாவது (௬) “𑌋𑌚𑍋 𑌯𑌜𑌂𑌷𑌿 𑌸𑌾𑌮𑌾𑌨𑌿 𑌤𑌥𑍈𑌵𑌾𑌥𑌰𑍍𑌵𑌣𑌾𑌨𑌿 𑌚 । 𑌸𑌰𑍍𑌵𑌮𑌷𑍍𑌟𑌾𑌕𑍍𑌷𑌰𑌾𑌨𑍍𑌤𑌸𑍍𑌥𑌮𑍍” [ருசோயஜூம்ஷி ஸாமாநி ததைவாதர்வணாநிச-ஸர்வமஷ்டாக்ஷராந்தஸ்தம்] என்கிறபடியே ஸகல வேத ஸங்க்ரஹமாய், † “மற்றெல்லாம்பேசிலும்” என்கிறபடியே [1] ஜ்ஞாதவ்ய ஸகலார்த்த ப்ரதிபாதகமாய், (௭) “𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 𑌪𑌰𑌮𑍋 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑍋 𑌗𑍁𑌹𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌗𑍁𑌹𑍍𑌯𑌮𑍁𑌤𑍍𑌤𑌮𑌮𑍍 । 𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌂 𑌚 𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 𑌮𑍂𑌲𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌸𑍍𑌸𑌨𑌾𑌤𑌨𑌃” [மந்த்ராணாம் பரமோ மந்த்ரோ குஹ்யா

† பெ-திருமொழி-8-10-3. 1. ஜ்ஞாதவ்யம்-அறியவேண்டியவை.

நாம் குஹ்ய முத்தமம் - பவித்ராம்சபவித்ராணும் மூலமந்த்ரஸ்ஸநா தநஃ] என்கிறபடியே மந்த்ரங்களில் வைத்துக்கொண்டு பரமமான மந்த்ரமாய், 1. குஹ்யங்களில் வைத்துக்கொண்டு உத்தமமானகுஹ்யமாய், பவித்ரங்களுக்கும் பவித்ரமாயிருக்கிற கௌரவம். சீர்மைக்குப் போரும்படி என்றது-தகும்படி யென்கை. ப்ரேமத்தோடே பேணியநுஸந்திக்கையாவது - இத்தை அநுஸந்திக்குமளவில் 2. ஸார்த்ரஹ்ருதயனாயிருந்து அநுஸந்திக்கை யன்றிக்கே, 3. இதன் வைலக்ஷண்யஜ்ஞாநமடியாக இதன்பக்கல் தனக்குஉண்டான ப்ரேமத்தோடே குஹ்யாநாம் குஹ்யமான இது அநதிகாரிகள் செவிப்படாதபடி (௮) ‘‘ஓம்தூயமெ நதமொவயெக’’ [மந்த்ரம்யத்நேநகோபயேத்] என்கிறபடியே பேணிக்கொண்டு அநுஸந்திக்கை. இப்படி அநுஸந்திக்க வேணுமென்கையாலே, ப்ரகாராந்தரேண அநுஸந்திக்கலாகாதென்கிற நியமம் தோற்றுகிறது.

‘இப்படி, தன்பக்கல் ப்ரேமமுண்டாகவே இம்மந்த்ரம் இவனுக்குக் கார்யகரமாமோ?’ என்ன, அருளிச்செய்கிறார்

**மூ.—(௪) மந்த்ரத்திலும் மந்த்ரத்துக்கு உள்ளீடான வஸ்துவிலும் மந்த்ரப்ரதனான ஆசார்யன்பக்கலிலும் ப்ரேமம் கனக்க உண்டானால் கார்யகரமாவது.**

(வ்யா.) ‘மந்த்ரத்திலும்’ என்று தொடங்கி. அதாவது - ஜ்ஞாதவ்யார்த்தஜ்ஞாபகமான இம்மந்த்ரந்தன்னிலும், சேஷித்வ ஸரண்யத்வ ப்ராப்யத்வங்களாகிற ஆகாரத்ரயயுக்தனாய இம்மந்த்ரத்துக்கு 4. வாச்யவஸ்துவாயிருக்கிற ஈஸ்வரவிஷயத்திலும் (௯) ‘‘தநூஹ்ரவ்ராஹணாயீநம்’’ [தந்மந்த்ரம் ப்ராஹ்மணாதீநம்] என்கிறபடியே இம்மந்த்ரம் ஆசார்யாதீநமா யிருப்பதொன்றாகையாலே இத்தை 5. யதாப்ரதி

1. குஹ்யம்-மறைக்கத்தகுந்தது. 2. ஸார்த்ரஹ்ருதயனாய்-உலர்ந்தமனமுடையவனாய்; ப்ரேமஸார்த்ரனாய். 3. இதன் வைலக்ஷண்யம்-ஸகலஸாஸ்த்ர ஸங்க்ரஹமாயிருத்தலும், அர்த்த பஞ்சகங்களையும் தெரிவிப்பதாதலும், பரமகுஹ்யமாயிருத்தலும் முதலானவை. வைலக்ஷண்யம்-அஸாதாரணத்தன்மை. 4. வாச்யவஸ்து-சொல்லப்படும்பொருள். 5. யதாப்ரதிபத்தியுக்தன்-எப்படி ப்ரதிபத்தி செய்ய வேணுமோ, அப்படிப்பட்ட ப்ரதிபத்தி செய்தவன்; ஸாஸ்த்ரோக்தமான ப்ரதிபத்தியுடையவன்.

பத்தியுக்தனாய்க்கொண்டு, தனக்கு உபகரித்த ஆசார்யவிஷயத்திலும் 1. தத்தத்வைலக்ஷண்யாநுரூபமாக ப்ரேமம் அதிஶயேந உண்டானால், இம்மந்த்ரம் இவனுக்குக் கார்யகரமாவதென்கை. (௧௦) “மந்த்ரே தத்தேவதாயாம் ச ததா மந்த்ரப்ரதே குரௌ । த்ரிஷு பக்திஸ் ஸதா கார்யா ஸா ஹி ப்ரதமஸாதநம்” [மந்த்ரே தத்தேவதாயாஞ்ச ததா மந்த்ரப்ரதே குரௌ-த்ரிஷு பக்திஸ்ஸதாகார்யா ஸாஹிப்ரதமஸாதநம்] என்னக்கடவதிறே.

இனி, இம்மந்த்ரத்தினுடைய அவதரணப்ரகார 2. கதநமுகத்தாலே இதனுடைய 3. அப்ரதிமவைபவத்தை அருளிச்செய்கிறார்

**சூ.–(௫) ஸம்ஸாரிகள் தங்களையும் ஈஶ்வரனையும் மறந்து, ஈஶ்வரகைங்கர்யத்தையும் இழந்து, இழந்தோமென்கிற இழவுமின்றிக்கே ஸம்ஸாரமாகிற பெருங்கடலிலே விழுந்து நோவுபட, ஸர்வேஶ்வரன் தன் க்ருபையாலே இவர்கள் தன்னையறிந்து கரைமரஞ்சேரும்படி, தானே ஶிஷ்யனுமாய் ஆசார்யனுமாய் நின்று திருமந்த்ரத்தை வெளியிட்டருளினான்.**

(வ்யா.) ‘ஸம்ஸாரிகள்’ என்று தொடங்கி. ஸம்ஸாரிகளாகிறார்-அநாத்யசித்ஸம்பந்தத்தாலே 4. ப்ரவாஹரூபேண வருகிற 5. அவித்யா கர்மவாஸநாருசிவிவஶராய் ஜந்மமரணாதி 6. க்லேஶபாகிகளாய்த் திரிகிற பத்தசேதநர். ‘தங்களையும் ஈஶ்வரனையும் மறந்து’ என்றது-(௧௧) “[illegible]” [நாஸ்தூதா

1. தத்தத்வைலக்ஷண்யம்-மந்த்ரம் தேவதை ஆசார்யன் என்ற மூவரின் வைலக்ஷண்யம். 2. கதநம்-சொல்லுதல். 3. அப்ரதிமவைபவம்-ஒப்பில்லாமஹிமை. 4. ப்ரவாஹரூபேணவருகிற-வ்யக்திபேதமிருப்பினும் முன்னுள்ள நாமரூபங்களோடு வருகிற. 5. அவித்யா-அஜ்ஞாநம்: இங்கே, தேஹாத்மாபிமாநமும் ஸ்வதந்த்ரனென்கிற அபிமாநமும். கர்மம்-அவ்வபிமானத்தினால் விளையும் புண்யபாபம். வாஸனை-விஷயம் முதலியன காணும்போது அஞ்சுதல் முதலியவற்றிற்குக் காரணமான அவித்யாவாஸனையும், த்ருணச்சேதாதிகளில் ப்ரவர்த்திக்கக் காரணமான கர்மவாஸனையும். விவஶர்-பரவஶர், 6. க்லேஶபாகிகள்-துன்பத்தையடைந்தவர்.

ஸ்ஸவதஸ்ஸர்வே ஹ்யாத்மாந: பரமாத்மந:-நாந்யதாலக்ஷணம் தேஷாம் பந்தே மோக்ஷே ததைவச] என்கிறபடியே ஸ்வதஸ்ஸித்தமான பகவச்சேஷத்வத்தை லக்ஷணமாகவுடையராயிருக்கிற தங்களையும் (கஉ) “பதிம்விச்வஸ்ய” [பதிம்விஶ்வஸ்ய] (கரு) “ஸ்வாமித்வம் ப்ரஹ்மணி ஸ்த்திதம்” [ஸ்வாமித்வம் ப்ரஹ்மணி ஸ்த்திதம்] இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே தங்களுக்கு 1.நிருபாதிகசேஷியாயிருக்கிற ஈச்வரனையும் அறியாதேயென்கை. ஆனால், ‘அறியாமலென்னாதே மறந்தென்பான் என்? முன் ஒருகால் நினைத்துப் பின்பு அந்நினைவுக்கு 2.ப்ரச்யுதி வந்தவிடத்திலிறே மறந்து என்னலாவது’ எனில்,—* “மறந்தேனுன்னை முன்னம்” என்கிறபடியே ஸ்வதஸ்ஸித்தமான ஸம்பந்தத்தையுணர்ந்தால் முன்பு நினைத்திருந்த அர்த்தத்தை மறந்தாற்போல இருக்கும் ஸம்பந்தத்தில் 3. உறைப்பை நினைத்து அருளிச்செய்காராமித்தனை. ‘ஈச்வர கைங்கர்யத்தையும் இழந்து’ என்றது- கீழ்ச்சொன்ன அஜ்ஞாநத்தாலே 4.வகுத்த சேஷியான ஈச்வர விஷயத்தில் கைங்கர்யமாகிற பரமபுருஷார்த்தத்தையும் 5. ப்ராபிக்கப்பெறாதேயென்கை. 6. புருஷார்த்தத்தினுடைய கௌரவத்தையும், 7. அதுக்கிட்டுப் பிறந்துவைத்துக் கிட்டப்பெறாமல் 8.கிடந்தபடியையும் நினைத்து, ‘இழந்து’ என்கிறார். ‘இழந்தோமென்கிற இழவுமின்றிக்கே’ என்றது-ஸ்வஸ்வரூபபரஸ்வரூபஜ்ஞாநமும் புருஷார்த்தஜ்ஞாநமும் இல்லாமையாலே, 9.ஸ்வசேஷத்வாநுரூபமான சேஷிவிஷயகைங்கர்யரூப புருஷார்த்தத்தை இழந்தோமென்கிற 10. அலாபக்லேசந்தானுமின்றிக்கே யென்கை. ‘ஸம்ஸாரமாகிற பெருங்கடலிலேவிழுந்து நோவு

---

* பெ-திருமொழி-சு-உ-உ. 1. நிருபாதிகசேஷி-ஒருகாரணத்தைப் பற்றியன்றிக்கேயிருக்கிற தலைவன். 2. ப்ரச்யுதி-நழுவுதல்; நாசமென்றபடி. 3. உறைப்பு-ஊன்றியிருப்பது; தார்ட்யம். 4. வகுத்தசேஷி-ப்ராப்தசேஷி. 5. ப்ராபிக்க-அடைய. 6. புருஷார்த்தத்தின்கௌரவம்-தன்னோடொத்ததும் மிக்கதும் இல்லாமையோடு பகவந்நிர்ஹேதுகக்ருபையால் அடையக்கூடியதாதலும், சேதநனுடைய போக்த்ருத்வகந்தத்தையும் பொறுதொழிகையும். 7. அதுக்கிட்டுப்பிறந்துவைத்து-அப்புருஷார்த்தத்தைப் பெறுவதன்பொருட்டே கரசரணாதிகளையுடைய தேஹத்தோடு பிறந்து என்றபடி; வைத்து-அசைச்சொல். 8. கிடந்த-விஷயாந்தரப்ரவணராய்க் கிடந்த என்றபடி. 9. ஸ்வசேஷத்வாநுரூபமான-தன் அடிமைக்கு ஏற்றதான. 10. அலாபக்லேசம்-கிடைக்காத வருத்தம்.

பட' என்றது - (௧௪) "𑌸𑌂𑌸𑌾𑌰𑌸𑌾𑌗𑌰𑌂 𑌘𑍋𑌰𑌂 𑌅𑌨𑌨𑍍𑌤𑌕𑍍𑌲𑍇𑌶𑌭𑌾𑌜𑌨𑌮𑍍" [ஸம் ஸாரஸாகரம் கோரம் அநந்தக்லேஶபாஜநம்] என்கிறபடியே 1. அநந்தக்லேஶபாஜநமாய், ஒருவராலும் ஸ்வயத்நத்தால் கரைகாண அரிதாம்படியிருக்கிற ஸம்ஸாரமாகிற 2. மஹாஸமுத்ரத்துக்குள்ளேவிழுந்து 3. தாபத்ரயாபிபூதராய்க்கொண்டு க்லேஶப்பட வென்கை. இத்தால், தங்களையும் ஈஶ்வரனையும் அறியாமையாலும், புருஷார்த்தத்தை யறியாமையாலும், ஸம்ஸார ஸமுத்ரத்துக்குள்ளே கிடந்து நோவுபடாநிற்க விரோதியான ஸம்ஸாரந்தன்னையும் 4. தரநிஸ்தரணோபாயத்தையும் அறியாமையாலும், ஜ்ஞாதவ்யமான 5. அர்த்தபஞ்சகத்திலும் ஒன்றையும் அறியாமற் கிடந்தார்களென்கை. (௧௫) "𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌸𑍍𑌯 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌰𑍂𑌪𑌮𑍍" [ப்ராப்யஸ்ய ப்ரஹ்மணோ ரூபம்] இத்யாதிப்படியே ஸகலஶாஸ்த்ரங்களும் ப்ரதிபாதிப்பது அர்த்தபஞ்சகத்தையுமிறே. இவ்வர்த்தங்களை இவர்களுக்கு ஸங்க்ரஹமாக அறிவிக்கைக்காக, ஸகலஶாஸ்த்ர ஸங்க்ரஹமான திருமந்த்ரத்தை ஸர்வேஶ்வரன் வெளியிட்ட ப்ரகாரத்தைச் சொல்லுகிறது மேல். 'ஸர்வேஶ்வரன் தன் க்ருபையாலே' என்றது- (௧௬) "𑌈𑌶𑍇𑌶𑌿𑌤𑌵𑍍𑌯𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑌾𑌦𑌨𑌿𑌦𑌂𑌪𑍍𑌰𑌥𑌮𑌾𑌦𑌪𑌿" [ஈசேஶிதவ்ய ஸம்பந்தாத நிதம்ப்ரதமாதபி] என்கிறபடியே அநாதியாக ஸர்வரோடுமுண்டான

---

1. அநந்தக்லேஶபாஜநமாய்-மிகப்பலவான க்லேஶங்களைச்சேதநர் அநுபவிப்பதற்கு ஆதாரமாய். 2. மஹாஸமுத்ரம்-பெருங்கடல்: கரையில்லாத சமுத்திரம். 3. தாபத்ரயாபிபூதராய்—ஆத்யாத்மிகம் ஆதிபௌதிகம் ஆதிதைவிகம் என்கிற மூன்றுவகைத் தாபங்களால் உபத்ரவிக்கப்பட்டவராய்: இவற்றுள், ஆத்யாத்மிகமாவது-தன்னைப்பற்றிவருந்துன்பம்; அது-ஶாரீரம் மாநஸம் என்று இரண்டுவகை. ஶாரீரஆத்யாத்மிகம்-தலைவலி கண்ணோய் ஜ்வரம் குஷ்டம் முதலியனவாக உடம்பில்வரும் வியாதிகள். மாநஸ ஆத்யாத்மிகம்-காம க்ரோதாதிகளும் ஶோகஅஸூயாதிகளுமாகப் பலவகையாம். ஆதிபௌதிகம்-மநுஷ்யவ்யாக்ரஸர்ப்பாதிகளாலும் பிஶாசராக்ஷஸராதிகளாலும் நேருந்துன்பம். ஆதிதைவிகம்-காற்று பனி மழை வெயில் இடி முதலியவற்றால் தைவிகமாக நேருந் துன்பம். 4. தரநிஸ்தரணஉபாயம்-அந்தஸம்ஸார ஸமுத்ரத்தைக் கடக்கும் உபாயம். 5. அர்த்தபஞ்சகங்கள்-ஸ்வஸ்வரூபம் பரஸ்வரூபம் உபாயஸ்வரூபம் புருஷார்த்தஸ்வரூபம் விரோதிஸ்வரூபம் என்பன.

ஸம்பந்தித்வ ஸம்பந்தத்தையுடையனான எம்பெருமான், (கஎ) “ஏவம் ஸம்ஸ்ருதிசக்ரஸ்தே ப்ராம்யமாணே ஸ்வகர்மபி꞉ । ஜீவே து꞉காகுலே விஷ்ணோ꞉ க்ருபா காப்யுபஜாயதே” [ஏவம்ஸம்ஸ்ருதிசக்ரஸ்தே ப்ராம்யமாணே ஸ்வகர்மபி꞉—ஜீவே து꞉காகுலே விஷ்ணோ꞉ க்ருபாகாப்யுபஜாயதே] என்கிறபடியே இவர்கள்படுகிற து꞉க தர்ஶநமாத்ரத்தாலுண்டான தன்னுடைய நிர்ஹேதுகக்ருபையாலே யென்கை. ‘இவர்கள் தன்னையறிந்து 1 கரைமரம்சேரும்படி’ என்றது-இப்படி ஸம்ஸாரஸாகரத்திலே கிடந்து நோவுபடுகிற இவர்கள் (கஅ) “த்வாமேவ ஶரணம் ப்ராப்ய நிஸ்தரந்தி மநீஷிண꞉” [த்வாமேவஶரணம்ப்ராப்ய நிஸ்தரந்தி மநீஷிண꞉] என்றும், (ககூ) “ஸம்ஸாரார்ணவமக்நாநாம் விஷயாக்ராந்தசேதஸாம் । விஷ்ணுபோதம் விநா நாந்யத் கிஞ்சிதஸ்தி பராயணம்” [ஸம்ஸாரார்ணவமக்நாநாம் விஷயாக்ராந்தசேதஸாம்-விஷ்ணுபோதம் விநாநாந்யத் கிஞ்சிதஸ்தி பராயணம்] என்றும் சொல்லுகிறபடியே ஸம்ஸார 2.நிஸ்தரணோபாயபூதனான தன்னை யறிந்து ஸம்ஸாரஸாகரத்தைக் கடந்து அக்கரைப்படும்படி யென்கை. ‘தானே ஶிஷ்யனுமாய் ஆசார்யனுமாய் நின்று’ என்றது-* “நரநாரணனாயுலகத்தறநூல் 3.சிங்காமைவிரித்தவன்” என்கிறபடியே நரநாராயணரூபேண அவதரித்து நரனான தான் ஶிஷ்யனுமாய், நாராயணனான தான் ஆசார்யனுமாய் நின்று என்கை. ‘திருமந்த்ரத்தை வெளியிட்டருளினான்’ என்றது-ஸகலஶாஸ்த்ர ஸங்க்ரஹமாய், அந்த ஶாஸ்த்ர தாத்பர்யமான அர்த்தபஞ்சகத்தையும் ஸுஸ்பஷ்டமாக ப்ரதிபாதியாநிற்கும் திருமந்த்ரத்தை ப்ரகாஶிப்பித்தருளினானென்கை. அருளிச்செய்தானென்னாதே வெளியிட்டருளினானென்றது - இப்போது, தான் ஒன்றை 4.நிர்மித்துச்

* பெ-தி-மொ. க0-கூ-க.

1. கரைமரம் சேர்தல்-(விஷ்ணுவான) மரக்கலத்தால் அக்கரைசேர்தல்; அல்லது கரையிலுள்ள மரத்தைச் சேர்தல். வாஸுதேவனே இளைப்பாறுதற்கு உரிய தருவாகச் சொல்லியிருப்பது காண்க. 2. நிஸ்தரண உபாயபூதனை-கடப்பதற்கு உபாயமாக இருப்பவனை. 3. சிங்காமை-சிதைந்து போகாமே. 4. நிர்மித்தல்—புதிதாக உண்டாக்குதல்.

சொன்னானல்லன், அநாதியானதத்தை ப்ரகாஶிப்பித்தானித்தனை என்னுமிடமும், அதிகுஹ்யமாயுள்ளத்தை இவர்கள் 1. துர்க்கதி கண்டு ஸஹிக்கமாட்டாமையாலே ப்ரகாஶிப்பித்தானென்னுமிடமும் தோற்றுகைக்காக.

'ஆனால், ஆசார்யனாய்நின்று வெளியிட்டருளிவிட அமையாதோ? ஶிஷ்யனாய்நின்றது எதுக்காக?' என்ன, அருளிச்செய்கிறார்

**மூ.—(௬)ஶிஷ்யனாய் நின்றது-ஶிஷ்யனிருக்கு மிருப்பு நாட்டாரறியாமையாலே அத்தை யறிவிக்கைக்காக.**

(வ்யா.) 'ஶிஷ்யனாய்' என்று தொடங்கி. அதாவது-ஆசார்யனாய் நின்று வெளியிட்டருளின அளவன்றிக்கே, தானே ஶிஷ்யனுமாய்க்கொண்டு நின்றது, (உ0) "ஆஸ்திகோ தர்மஶீலஶ்ச ஶீலவாந் வைஷ்ணவஶ்ஶுசி:। கம்பீரஶ்சதுரோ தீரஶ்ஶிஷ்ய இத்யபிதீயதே" [ஆஸ்திகோதர்மசீலஸ்சஶீலவாந்வைஷ்ணவஶ்ஶுசி - கம்பீரஸ்சதுரோதீரஸ் ஶிஷ்யஇத்யபிதீயதே] (உக) "ஶரீரம் வஸுவிஜ்ஞாநம் வாஸ: கர்ம குணாநஸூந் । குர்வர்த்தம் தாரயேத்யஸ்து ஸ ஶிஷ்யோ நேதரஸ்ஸ்ம்ருத:" [ஶரீரம்வஸுவிஜ்ஞாநம் வாஸஃகர்ம குணாநஸூந்-குர்வர்த்தம்தாரயேத்யஸ்து ஸஶிஷ்யோ நேதரஸ்ஸ்ம்ருத:] (உஉ) "ஸத்புத்திஸ்ஸாதுஸேவீ ஸமுசிதசரிதஸ்தத்த்வபோதாபிலாஷீ ஶுஶ்ரூஷுஸ்த்யக்தமாந: ப்ரணிபதநபர: ப்ரஶ்நகாலப்ரதீக்ஷ: । ஶாந்தோ தாந்தோऽநஸூயுஶ்ஶரணமுபகதஶ்ஶாஸ்த்ரவிஶ்வாஸஶாலீ ஶிஷ்ய: ப்ராப்த: பரீக்ஷாம் க்ருதவிதபிமதஸ்தத்த்வதஶ்ஶிக்ஷணீய:" [ஸத்புத்திஸ்ஸாதுஸேவீஸமுசிதசரிதஸ்தத்வ போதாபிலாஷீ ஶுஶ்ரூஷுஸ்த்யக்தமாந:ப்ரணிபதநபர: ப்ரஶ்நகாலப்ரதீக்ஷ:- ஶாந்தோதாந்தோநஸூயுஶ்ஶரணமுபகதஶ்ஶாஸ்த்ரவிஶ்வாஸஶாலீ ஶிஷ்ய:ப்ராப்த:பரீக்ஷாம் க்ருதவிதபிமதஸ்தத்வதஶ்ஶிக்ஷணீய:] இத்யாதிகளிற் சொல்லுகிற 2. படிகளும் 3. ஸாத்யாந்தர நிவ்ரு

1. துர்க்கதி-கஷ்டமான நிலைமை. 2. படிகளும்-ஶிஷ்யலக்ஷணங்களும். 3. ஸாத்யாந்தர நிவ்ருத்தி-த்யக்தமாந: என்பதில் ஆசார்யாநுவர்த்தநமாகிற ஸாத்யத்துக்கு விரோதியான அஹங்கார நிவ்ருத்தியும், 'தத்வபோதாபி

த்தியும், பலஸாதநஶுஶ்ரூஷையும், ஆர்த்தியும், ஆதரமும், அநஸூயையும் உடையனு யிருக்கையுமாகிற ஶிஷ்யலக்ஷணம் லோகத்திலுள்ளார் அறியாமையாலே அத்தை ஸ்வாநுஷ்டாநத்தாலே அறிவிக்கைக்காக வென்கை. உபதேஶத்தாலே அறிவிக்குமளவில் ஸ்வோத்கர்ஷம் தேடிக்கொள்ளவந்தானித்தனை யென்று நினைக்கவுங் கூடும்; அநுஷ்டாநத்தாலே அறிவிக்குமளவில் நமக்கும் இது வேணுமென்று விஶ்வஸித்துப் 1. பரிக்ரஹிக்கைக்கு உடலாயிருக்குமிறே.

'இப்படி ஶிஷ்யனுய்நின்று இம்மந்த்ரஶிக்ஷைபண்ணி இவ்வழியாலே ஜ்ஞாநம் பிறக்கவேணுமோ? * "ஞானக்கலைகள்" என்கிறபடியே ஸகலஶாஸ்த்ரங்களும் ஜ்ஞாநஸாதநமாயன்றே இருப்பது; அவற்றை அப்யஸித்து அவ்வழியாலே ஜ்ஞாநம் பிறந்தாலோ?' என்ன, ஶாஸ்த்ரஜந்யஜ்ஞாநத்துக்கும் இம்மந்த்ர 2. ஜந்யஜ்ஞாநத்துக்கும் உண்டான விஶேஷத்தை ஸத்ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார்

**மூ.—(எ) ஸகலஶாஸ்த்ரங்களாலும் பிறக்கும் ஜ்ஞாநம் ஸ்வயமார்ஜிதம் போலே, திருமந்த்ரத்தால் பிறக்கும் ஜ்ஞாநம் பைத்ருகதநம்போலே.**

(வ்யா.) 'ஸகலஶாஸ்த்ரங்களாலும்' என்று தொடங்கி. அதாவது-தத்வஜ்ஞாந 3. ஜநகங்களான ஶ்ருதிஸ்ம்ருத்யாதி ஸகலஶாஸ்த்ரங்களாலும் சேதநருக்குப் பிறக்கும் ஜ்ஞாநம் 4. ஸ்வயம் ஆர்ஜிததநம்போலே அத்யாயாஸலப்யமாயிருக்கும். ஆசார்யோபதேஶம்

லாஷீ' என்பதில் ஆசார்யனிடத்தில் சிஷ்யன் அபேக்ஷிக்கின்ற ஜ்ஞாநரூப பலமும், 'ஶுஶ்ரூஷு:' என்பதில் அந்தபலத்திற்கு ஸாதநமான ஆசார்யபரிசர்யையும், 'ப்ரஶ்நகாலப்ரதீக்ஷ:' என்பதில் ஆர்த்தியும் [ஆர்த்தியாவது-இல்லாமையாலுண்டான துக்கம்,] 'ப்ரணிபதநபர:' என்பதில் ஆதரமும் வேண்டுமென்பது பெறப்படும். 'ஸத்புத்தி:' என்று தொடங்குகின்ற ஶ்லோகமும் "ஆஸ்திக:" என்று தொடங்குகின்ற ஶ்லோகமும் சிஷ்யலக்ஷணத்தையும், "ஶரீரம்வஸு" என்று தொடங்குகின்ற ஶ்லோகம் சிஷ்யனுக்கு உண்டாகவேண்டிய தன்மையையும் தெரிவிப்பனவாகும்.

1. ப்ரக்ரஹிக்கை-அங்கீகரித்து மேற்கொள்ளுதல். உடலாயிருக்கும்-அங்கமாக இருக்கும். 2. ஜந்யம்-உண்டாவது. 3. ஜநகம்-உண்டாக்குவது. 4. ஸ்வயம் ஆர்ஜிததநம்-தானே ஸம்பாதித்த திரவியம்.

* திருவாய்-க-கூ-அ.

அடியாகத் திருமந்த்ரத்தால் பிறக்கும் ஜ்ஞாநம், 1. பைத்ருகதநம்போலே அநாயாஸலப்யமாயிருக்குமென்கை. (உரு) "ஸாஸ்த்ரஜ்ஞாநம் பஹுக்லேஸம் புத்தேஸ்சலநகாரணம் । உபதேஸாத்தரிம் புத்த்வா விரமேத் ஸர்வகர்மஸு" [ஸாஸ்த்ரஜ்ஞாநம் பஹுக்லேஸம் புத்தேஸ்சலநகாரணம் - உபதேஸாத்தரிம்புத்வா விரமேத்ஸர்வகர்மஸு] என்னக்கடவதிறே. இத்தால், ஸாஸ்த்ரங்களிற்காட்டில் தத்ஸங்க்ரஹமான திருமந்த்ரத்துக்கு உண்டான வைபவம் சொல்லிற்றாயிற்று.

'2. ஆனால், 3. ஸாஸ்த்ரங்கனொழிந்ததாகிறது; பகவந்மந்த்ரந்தான் இதொன்றுமன்றே, பின்னையும்பலவில்லையோ?' என்கிறஸங்கையிலே, மந்த்ராந்தரங்களிற்காட்டில் இதுக்கு உண்டான வைபவத்தை அருளிச்செய்வதாகத் திருவுள்ளம்பற்றி

## சூ.–(அ) பகவந்மந்த்ரங்கள் தான் அநேகங்கள்.

(வ்யா.) 'பகவந் மந்த்ரங்கள் தான் அநேகங்கள்' என்கிறார். அதாவது - (உச) "அநந்தாந் கல்யாணகுணாந் ஸ்ரீவாஸஸ்ய ஜந்மநாம ஸஹஸ்ராணி" [அனந்தாந்கேருணராஸிவத் குணபரீவாஹாத்மநாம் ஜந்மநாம் ஸங்க்யா](உரு) "பஹவோ நருப கல்யாண குணா: புத்ரஸ்ய ஸந்தி தே" [பஹவோ நருப கல்யாணகுணா: புத்ரஸ்ய ஸந்தி தே] (உசு) "தவாநந்தகுணஸ்யாபி ஷடேவ ப்ரதமே குணா:" [தவாநந்தகுணஸ்யாபி ஷடேவ ப்ரதமே குணா:] (உஎ) "பஹூநி மே வ்யதீதாநி ஜந்மாநி தவ சார்ஜுந" [பஹூநி மே வ்யதீதாநி ஜந்மாநி தவசார்ஜுந] என்றும் * "எண்ணில் தொல்புகழ்" என்றும் † "எங்கின்றபோணியுமாய்ப்பிறந்தாய்"

* தி-வா-மொ-ந-ரு-ரு.

† திரு-விருத்-க.

1. பைத்ருகதநம்—பிதாவினிடத்தினின்று கிடைத்த த்ரவியம். 2. ஆனால்-ஸாஸ்த்ரங்களைக்காட்டிலும் திருமந்த்ரம் ஸுலபமாக உண்மை ஞானத்தை உணர்த்துவதானாலென்றபடி. 3. ஸாஸ்த்ரங்கனொழிந்ததாகிறது-ஸாஸ்த்ரங்கள் ஞானத்தை உண்டாக்கும்போது பஹுக்லேஸ ஜநகங்களாகையால் விடப்படட்டும் என்றபடி.

என்றும் இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே பகவத்குணங்களும் 1.குணபரீவாஹரூபங்களான அவதாரங்களும் 2.அஸங்க்யாதமாயிருக்குமாபோலே 3 அவற்றை அநுபந்தித்திருக்கும் மந்த்ரவிசேஷங்களும் (உஅ) "அநந்தா வை பகவந் மந்த்ரா:" [அநந்தா வை பகவந் மந்த்ரா:] என்கிறபடியே அநேகங்களாயிருக்குமென்கை.

'அவையெல்லாந்தான் ஏகவர்க்கமோ?' என்ன,

**மூ.-(கூ) அவைதான், வ்யாபகங்களென்றும் அவ்யாபகங்களென்றும் இரண்டுவர்க்கம்.**

(வ்யா.) 'அவைதான் வ்யாபகங்களென்றும் அவ்யாபகங்களென்றும் இரண்டுவர்க்கம்' என்கிறார்; அதாவது-4. ஸர்வவ்யாபகமான பகவத்ஸ்வரூபத்தை ப்ரதிபாதிக்கையாலே வ்யாபகங்களென்றும், பகவதவதார குண சேஷ்டிதங்களில் ஒரொன்றை ப்ரதிபாதிக்கையாலே அவ்யாபகங்களென்றும் உபயவர்க்கமாயிருக்குமென்கை.

'வர்க்கத்வயமும் தன்னிலொக்குமோ?' என்ன,

**மூ.-(க0) அவ்யாபகங்களில் வ்யாபகங்கள் மூன்றும் ஶ்ரேஷ்டங்கள்.**

(வ்யா.) 'அவ்யாபகங்களில் வ்யாபகங்கள் மூன்றும் ஶ்ரேஷ்டங்கள்' என்கிறார். அதாவது - அவ்யாபகங்களாயிருந்துள்ள ஸகலமந்த்ரங்களிலும் (உகூ) "நாராயணாய வித்மஹே வாஸுதேவாய தீமஹி, தந்நோ விஷ்ணு: ப்ரசோதயாத்" [நாராயணாய வித்மஹே வாஸுதேவாய தீமஹி, தந்நோ விஷ்ணு: ப்ரசோதயாத்] என்று விஷ்ணுகாயத்ரியில் ஓதப்படுகிற வ்யாபகமந்த்ரங்கள் மூன்றும் ஶ்ரேஷ்டங்களாயிருக்குமென்கை.

5. இந்தவிஷ்ணுகாயத்ரியிலே நாராயண வாஸுதேவ விஷ்ணு ஶப்தங்கள் அந்தமந்த்ரத்ரயத்துக்கும் ப்ரதாநபூத நாமத்ரயங்கள்;

---

1. குணபரீவாஹரூபங்களான-குணப்ரவாஹரூபங்களான: குணப்ரகாஶகங்களான என்றபடி. 2. அஸங்க்யாதம்-அளவற்றவை. 3. அவற்றை அநுபந்தித்திருக்கும்-அந்தக்குணங்களையும் அவதாரங்களையும் அநுஸரித்திருக்கும். 4. ஸர்வவ்யாபகமான-ஸர்வவஸ்து வ்யாபகமான. 5. 'நாராயண வாஸுதேவ விஷ்ணுஶப்தங்கள் அவ்வம்மந்த்ரங்கட்கு வாசகமாமோ?' என்ற சங்கையைப் போக்குவதற்காக, இந்த விஷ்ணுகாயத்ரியிலே என்று தொடங்கி அருளிச்செய்கிறார்.

ஆகையாலே, ஸாதாரணப்ரணவ நமஸ்ஸுக்களோடேகூடின மந்த்ர த்ரயத்துக்கும் 1. உபலக்ஷணமாகக்கடவது.

'இந்தவ்யாபகமந்த்ரத்ரயமும் தன்னிலொக்குமோ?' என்ன,

**மூ.—(கக) இவை மூன்றிலும் வைத்துக்கொண்டு பெரியதிருமந்த்ரம் ப்ரதாநம்.**

(வ்யா.) 'இவைமூன்றிலும் வைத்துக்கொண்டு பெரியதிருமந்த்ரம் ப்ரதாநம்' என்கிறார். அதாவது - அவ்யாபகங்களிற்காட்டில் ஶ்ரேஷ்டமாயிருந்துள்ள இந்த வ்யாபகமந்த்ரங்கள் மூன்றிலும் 2. வைத்துக்கொண்டு (உக) "நாராயணாயவித்மஹே" [நாராயணாயவித்மஹே] என்று 3. ப்ரதமோபாத்தமாகையாலும், 4. அர்த்தபூர்த்யாதிகளாலும், (௩௦) "நாஸ்திசாஷ்டாக்ஷராத்பர:" [நாஸ்திசாஷ்டாக்ஷராத்பர:] (௩க) "நமந்த்ரோஷ்டாக்ஷராத்பர:" [நமந்த்ரோஷ்டாக்ஷராத்பர:] என்னும்படியான பெருமையையுடைய திருமந்த்ரம் ப்ரதாநமாயிருக்குமென்கை.

'மற்றை வ்யாபகத்வயத்துக்கும் தாழ்வு ஏது?' என்ன,

**மூ.—(கஉ) மற்றையவை யிரண்டுக்கும் அஶிஷ்டபரிக்ரஹமும் அபூர்த்தியும் உண்டு.**

(வ்யா.) 'மற்றையவையிரண்டுக்கும் அஶிஷ்டபரிக்ரஹமும் அபூர்த்தியும் உண்டு' என்கிறார். அதாவது - வாஸுதேவவிஷ்ணுஶப்தங்களான மற்றை வ்யாபகமந்த்ரங்களிரண்டுக்கும், நாராயணஶப்தம்போலே 5. ஸ்வரூபரூபகுணாதிகளை யெல்லாம் ப்ரதிபாதியாதே 6. ஸ்வரூபமாத்ரத்தை ப்ரதிபாதிக்கையாலே, 7. நிர்விஶேஷசிந்மாத்ரவஸ்து

1. உபலக்ஷணம்-ஒருமொழி தன் இனத்தைக் காட்டுவது; இங்கே ஸூசகமென்னலாம். 2. வைத்துக்கொண்டு-சாரியை. 3. ப்ரதமோபாத்தம்-முதலில் சொல்லப்பட்டது. 4. அர்த்தபூர்த்யாதிகளால் என்ற இடத்தில் 'ஆதி' ஶப்தத்தால் ஶிஷ்டபரிக்ரஹத்தைச் சொல்லுகிறது. 5. ஸ்வரூபம்-திவ்யாத்மஸ்வரூபம், ரூபம்-திவ்யமங்களவிக்ரஹம், ஆதிஶப்தம்-விபூதியைக்காட்டும். 6. ஸ்வரூபமாத்ரத்தை-வ்யாபகமான ஸ்வரூபமாத்ரத்தையென்றபடி. 7. நிர்விஶேஷசிந்மாத்ர வஸ்துவாதிகள்-விஶேஷண ஶூந்யமான சித்ஸ்வரூபமே தத்வமென்று வாதிப்பவர்கள்: ஶங்கரன்முதலியோர். நிர்விஶேஷவஸ்து-ஸஜாதீயவிஜாதீய ஸ்வகதபேத ஶூந்யமான வஸ்து; ஜ்ஞாத்ருஜ்ஞேயஜ்ஞானமென்கிற வேறுபாடு இல்லாதசிந்மாத்ரமான வஸ்து எனினுமாம். குத்ருஷ்டிகள் - வேதத்துக்கு அபார்த்தம்பண்ணுகிற மாயாவாதிகள் என்னலாம்.

வாதிகளான குத்ருஷ்டிகள், மிகவும் ஆதரித்துப்போருகையாகிற அபரிஷ்டபரிக்ரஹமும், 1. வ்யாப்யாத்யாஹாராதிஸாபேக்ஷதை யாகிற அபூர்த்தியும் உண்டென்கை. 2. "ஷடக்ஷரீ-வ்யாப்யபதார்த்தங்களையும், வ்யாபநப்ரகாரத்தையும், வ்யாப்திபலத்தையும், வ்யாபகனுடைய குணங்களையும் சொல்லாதே வ்யாப்திமாத்ர ப்ரகாஶகமாகையாலே அபூர்ணம்; 3. வ்யாபநப்ரகாரத்தைச் சொல்லாநிற்கச்செய்தேயும், வ்யாப்யபதார்த்தங்களுக்கு வாசகஶப்தம் இல்லாமையாலும், "வஸுவஸதி" [ஸர்வம்வஸதி] என்று 4. அர்த்தபலத்தாலே ஸர்வஶப்தம் புகுந்தாலும் அதில் குணம் அந்வயியாமையாலும், இனிக் குணஸித்திக்காக பகவச்சப்தத்தைக் கூட்டிக்கொள்ள வேண்டுகையாலும், வ்யாப்திபலத்தைச் சொல்லாமையாலும், 5. த்வாதஶாக்ஷரியும் அபூர்ணம்; 6. இம்மந்த்ரம், அவைபோலன்றியிலே, வ்யாப்ய

1. வ்யாப்யம்-வ்யாபிக்கப்பட்ட வஸ்துக்கள். 2. ஷடக்ஷரி-'ஓம்நமோவிஷ்ணவே' என்கிற ஆறு அக்ஷரங்களையுடைய மந்த்ரம். ஸர்வத்ர வேவிஷ்டே இதி-விஷ்ணு: என்று வ்யுத்பத்தி. 3. வாஸுதேவ ஶப்தத்துக்கு - ஸர்வம் அஸ்மிந் வஸதி வாஸுதேவ: என்று அதிகரணேயும், ஸர்வத்ரவஸதிஇதி வாஸுதேவ: என்று கர்த்தரியும் எனஇரண்டு விதமான வ்யுத்பத்தி உண்டு. கர்த்தரிவ்யுத்பத்தியில் அந்தர்யாமித்வமாகிறவ்யாபநப்ரகாரம் ஏற்படுதல் காண்க. 4. வஸதிஎன்று இருப்பதால்எங்கேவஸிக்கிறான் என்று ஒருகேள்வி யுண்டாக, ஸர்வத்ர [எங்கும்]என்று அதிகரணத்தை [இடப்பொருளை]க் காட்டக் கூடிய ஶப்தத்தைச் சேர்த்துக் கொள்ளவேண்டிய அவஶ்யம் கர்த்தரிவ்யுத்பத்தியிலுள்ளதுபோலவே ஸர்வம் அஸ்மிந்வஸதி என்ற அதிகரணேவ்யுத்பத்தியிலும் ஸர்வஶப்தம்வந்தாலும், கர்த்தரிவ்யுத்பத்தியில் அத்யாஹரித்துக் கொண்ட ஸர்வத்ர என்ற சொல்லே இங்கு மாறிக்கிடத்தலால், அங்குக் குணத்துக்குள்ளேவ்யாப்தியில்லாமையால் அது ஒழிந்தவைகளையே கொள்ள வேண்டியதாக நேர்ந்ததுபோலவே இங்கும் குணம் ஒழிந்தனவே இவனிடத்து உள்ளன என்று ஏற்படுமென்பது 'அர்த்த பலத்தாலே ஸர்வஶப்தம் புகுந்தாலும் அதில் குணம் அந்வயியாமையாலும்' என்பதன் தாத்பர்யம். 5. த்வாதஶாக்ஷரி-"ஓம்நமோபகவதே வாஸுதேவாய" என்பது. இதற்குத் திருஎன்று விஶேஷணமிட்டுச் சொன்னது-பெரியபெருமாளுடைய மந்த்ரமாகையாலே. 6. திருவஷ்டாக்ஷர மந்த்ரம்-நாரஶப்தத்தால் வ்யாப்ய பதார்த்தங்களையும், நாராயணஶப்தத்தில் பஹுவ்ரீஹி [நாரா:அயநம் யஸ்ய ஸ:] ஸமாஸத்தால் வ்யாபநப்ரகாரமான அந்தர்யாமித்வத்தையும், தத்புருஷ[நாராணாம்அயநம்] ஸமாஸத்தால் அவ்வவ்வஸ்துக்களின் நிர்வாஹகத்வமாகிய வ்யாப்திபலத்தையும், நாரஶப்தத்தாலேயே ஜ்ஞாநாநந்த அமலத்வாதிகளான கல்யாண குணகணங்களையும் ஸம்யக் தெரிவிக்கும்.

பதார்த்தங்களோடு வ்யாபநப்ரகாரத்தோடு வ்யாப்திபலத்தோடு வ்யாபகனுடைய குணங்களோடு வாசியற 1.ஶாப்தமாகக் காட்டுகை யாலே, அவற்றிற்காட்டில் இதுக்கு 2.அர்த்தபௌஷ்கல்யநிபந்தநமான ஆதிக்யம் உண்டு" என்று, மற்றைவ்யாபகமந்த்ரங்களிரண்டினுடைய அபூர்த்தியையும் திருமந்த்ரத்தினுடைய அர்த்தபூர்த்தியையும் ஸுஸ்பஷ்டமாக ஆச்சான்பிள்ளை அருளிச்செய்தாரிறே.

'இதுதனக்கு ஶிஷ்டபரிக்ரஹம் உண்டோ'? என்ன, அருளிச் செய்கிறார்

**ஸூ.-(கங) இத்தை வேதங்களும், ருஷிகளும், ஆழ்வார்களும், ஆசார்யர்களும் விரும்பினார்கள்.**

(வ்யா.) 'இத்தை' என்று தொடங்கி. அதாவது-விஷ்ணுகாயத்ரி யிலே வ்யாபகமந்த்ரத்ரயத்தையுஞ் சொல்லுகிறவளவில் ப்ரதமத்தி லே நாராயணஶப்தத்தை ப்ராதாந்யேந ப்ரதிபாதிக்கையாலும், (கஉ) "விஶ்வம் நாராயணம்" [விஶ்வம் நாராயணம்] என்று தொடங்கி, (கங) "நாராயண பரம்ப்ரஹ்ம தத்த்வம் நாராயண: பர:। நாரா யண பரோ ஜ்யோதிராத்மா நாராயண: பர:। யச்ச கிஞ்சிஜ்ஜகத் ஸர்வம் த்ருஶ்யதே ஶ்ரூயதேபி வா। அந்தர்பஹிஶ்ச தத்ஸர்வம் வ்யாப்ய நாராயண ஸ்தித:" [நாராயண பரம்ப்ரஹ்ம தத்த்வம்நாரா யண: பர:, நாராயணபரோஜ்யோதி ராத்மா நாராயண: பர:, யச்சகி ஞ்சிஜ்ஜகத்யஸ்மிந் த்ருஶ்யதே ஶ்ரூயதேபி வா, அந்தர்ப் பஹிஶ்ச தத்ஸர்வம் வ்யாப்ய நாராயணஸ் ஸ்தித:] என்று ஸகலவேதாந்தஸார பூதமான நாராயணநுவாகத்திலும், (கச) "ஏகோ ஹ வை நா ராயண ஆஸீந்ந ப்ரஹ்மா நேஶாநோ நேமே த்யாவாப்ருதிவீ" [ஏகோஹவை நாராயண ஆஸீந் நப்ரஹ்மா நேஶாநோ நேமே த்யாவாப்ருதிவீ] என்று மஹோபநிஷத்திலும், (கரு) "சக்ஷுஶ்ச த்ரஷ்டவ்யஞ்ச நாராயண:, ஶ்ரோத்ரஞ்ச ஶ்ரோதவ்யஞ்ச நாராய

1. ஶாப்தமாகக் காட்டுதல்-சப்தத்தாலேயே தெரிவித்தல். 2. அர்த்த பௌஷ்கல்யம்-பொருள்நிரம்பியிருத்தல்

𑌣𑌃” [சக்ஷுஶ்ச த்ரஷ்டவ்யஞ்ச நாராயண:, ஶ்ரோத்ரஞ்சஶ்ரோதவ்யஞ்சநாராயண:] என்று தொடங்கி (௩௬) “𑌦𑌿𑌶𑌶𑍍𑌚 𑌪𑍍𑌰𑌦𑌿𑌶𑌶𑍍𑌚 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌃” [திஶஶ்சப்ரதிஶஶ்சநாராயண:] என்று முடிவாக. [1]நடுவு அடைய ஸுபாலோபநிஷத்திலும், (௩௭) “𑌯𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌾 𑌶𑌰𑍀𑌰𑌂 𑌯𑌸𑍍𑌯 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀 𑌶𑌰𑍀𑌰𑌂” [யஸ்யாத்மாஶரீரம் யஸ்யப்ருதிவீ ஶரீரம்] என்று தொடங்கி (௩௮) “𑌯𑌸𑍍𑌯 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌶𑍍𑌶𑌰𑍀𑌰𑌂” [யஸ்யம்ருத்யுஶ்ஶரீரம்] என்கிறது ஈறாக நடுவுள்ள பர்யாயங்கள்தோறும் (௩௯) “𑌏𑌷 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌤𑍍𑌮𑌾𑌽𑌪𑌹𑌤𑌪𑌾𑌪𑍍𑌮𑌾 𑌦𑌿𑌵𑍍𑌯𑍋 𑌦𑍇𑌵 𑌏𑌕𑍋 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌃” [ஏஷ ஸர்வபூதாந்தராத்மா அபஹதபாப்மா திவ்யோ தேவ ஏகோநாராயண:] என்று அந்தர்யாமிப்ராஹ்மணத்திலும் வாஸுதேவ விஷ்ணுஶப்தங்களை அநாதரித்து நாராயணஶப்தத்தை யிட்டு பகவத்ஸ்வரூபாதிகளை நிர்த்தேஶிக்கையாலும், அபௌருஷேயமாய் நித்யநிர்த்தோஷமாய் ஸ்வத:ப்ரமாணங்களான வேதங்களும் விரும்பிற்றின. (௪௰) “𑌯𑌥𑌾 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌦𑍇𑌵𑍇𑌷𑍁 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌾𑌤𑍍𑌪𑌰𑌃। 𑌤𑌥𑌾 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑍁 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑍇𑌷𑍁 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌚𑌾𑌷𑍍𑌟𑌾𑌕𑍍𑌷𑌰𑌾𑌤𑍍𑌪𑌰𑌃” [யதாஸர்வேஷு தேவேஷு நாஸ்தி நாராயணாத்பர:- ததாஸர்வேஷு மந்த்ரேஷு நாஸ்திசாஷ்டாக்ஷராத்பர:] (௪௧) “𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌬𑌾𑌹𑍁𑌰𑌥𑌾𑌤𑍍𑌰 𑌸𑌤𑍍𑌯𑌪𑍂𑌰𑍍𑌵𑌂 𑌬𑍍𑌰𑌵𑍀𑌮𑌿 𑌵𑌃। 𑌹𑍇 𑌪𑍁𑌤𑍍𑌰𑌶𑌿𑌷𑍍𑌯𑌾𑌶𑍍 𑌶𑍃𑌣𑍁𑌤 𑌨𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑍋𑌽𑌷𑍍𑌟𑌾𑌕𑍍𑌷𑌰𑌾𑌤𑍍𑌪𑌰𑌃” [ஊர்த்வபாஹுரத்யாத்ர ஸத்யபூர்வம் ப்ரவீமிவ:- ஹேபுத்ரஶிஷ்யாஶ்ஶ்ருணுத நமந்த்ரோஷ்டாக்ஷராத்பர:] (௪௨) “𑌸𑌰𑍍𑌵𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌸𑌾𑌰𑌾𑌰𑍍𑌥𑌸𑍍𑌸𑌂𑌸𑌾𑌰𑌾𑌰𑍍𑌣𑌵𑌤𑌾𑌰𑌕𑌃। 𑌗𑌤𑌿𑌰𑌷𑍍𑌟𑌾𑌕𑍍𑌷𑌰𑍋 𑌨𑍃𑌣𑌾𑌂 𑌅𑌪𑍁𑌨𑌰𑍍𑌭𑌵𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌿𑌣𑌾𑌂” [ஸர்வவேதாந்தஸாரார்த்தஸ் ஸம்ஸாரார்ணவதாரக: - கதிரஷ்டாக்ஷரோ ந்ருணாம் அபுநர்ப்பவகாங்க்ஷிணாம்] (௪௩) ‘𑌆𑌰𑍍𑌤𑍍𑌤𑌾 𑌵𑌿𑌷𑌣𑍍𑌣𑌾𑌶𑍍𑌶𑌿𑌥𑌿𑌲𑌾𑌶𑍍𑌚 𑌭𑍀𑌤𑌾𑌃 𑌘𑍋𑌰𑍇𑌷𑍁 𑌚 𑌵𑍍𑌯𑌾𑌧𑌿𑌷𑍁 𑌵𑌰𑍍𑌤𑌮𑌾𑌨𑌾𑌃। 𑌸𑌙𑍍𑌕𑍀𑌰𑍍𑌤𑍍𑌯 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌶𑌬𑍍𑌦𑌮𑌾𑌤𑍍𑌰𑌂 𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌦𑍁𑌃𑌖𑌾𑌸𑍍𑌸𑍁𑌖𑌿𑌨𑍋 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿” [ஆர்த்தா விஷண்ணாஶ்ஶிதிலாஶ்சபீதா:

1. நடுவு அடைய-நடுவெல்லாம்.

கோரேஷு சப்தாதிஷு வர்த்தமாநா:-ஸங்கீர்த்ய நாராயண ஶப்தமாத்ரம் விமுக்த து:காஸ்ஸுகிநோ பவந்தி] (சச) "நாராயணேதி மந்த்ரோ(அ)ஸ்தி வாகஸ்தி வஶவர்த்திநீ। ததாபி நரகே கோரே பதந்தீதி கிமத்புதம்" [நாராயணேதிமந்த்ரோஸ்தி வாகஸ்திவஶவர்த்திநீ ததாபிநரகேகோரேபதந்தீதிகிமத்புதம்] (சரு) "கிம் தத்ர பஹுபிர் மந்த்ரை: கிம் தத்ர பஹுபிர் வ்ரதை:। நமோ நாராயணாயேதி மந்த்ரஸ்ஸர்வார்த்தஸாதக:" [கிம் தத்ர பஹுபிர்மந்த்ரை: கிம் தத்ர பஹுபிர்வ்ரதை:-நமோநாராயணாயேதி மந்த்ரஸ்ஸர்வார்த்தஸாதக:] இத்யாதிகளாலே வேதார்த்தோபப்ரும்ஹணங்களாயிருக்கிற 1. ஸ்வ ப்ரபந்தங்களிலே பலவிடங்களிலும் இத்தை ஶ்லாகித்துக்கொண்டு சொல்லுகையாலே, வேதார்த்த விஶதீகரண ப்ரவ்ருத்தரான வ்யாஸாதி பரமருஷிகளும் விரும்பினார்கள்; * "வண்புகழ்நாரணன்" † "செல்வநாரணன்" என்று தொடங்கி ‡ "வாழ்புகழ் நாரணன்" என்று முடிவாக, ஆதிமத்யாவஸாநமாக நம்மாழ்வார் அருளிச்செய்கையாலும், § "நாடுநகரமும் நன்கறிய நமோ நாராயணாய" என்று தொடங்கி ** "ஓவாதே நமோ நாராணா வென்பன்" என்று பெரியாழ்வாரும், †† "நாத்தழும்பெழ நாரணா" என்று தொடங்கி ‡‡ "நலந்திகழ்நாரணன்" என்று பெருமாளும், §§ "நான்முகனை நாராயணன் படைத்தான்" என்று தொடங்கி *** "எட்டெழுத்து மோதுவார்கள் வல்லர் வானமாளவே" என்று திருமழிசைப்பிரானும், *† "நான் கண்டுகொண்டேன் நாராயணா வென்னும் நாமம்" என்று உபக்ரமதசையிலே ஒருகால் சொன்னாற்போலே ஒன்பதின்கால் சொல்லி *‡ "நாராயணாவோ! மணிவண்ணா! நாகணையாய்! வாராய்" என்று திருமங்கையாழ்வாரும் உபக்ரமத்தோடு உபஸம்ஹாரத்தோடு வாசியற அருளிச்செய்கையாலும், *§ "நன்மாலைகொண்டு நமோ நாரணா வெனனும் சொன்மாலை கற்றேன்" என்றும,

---

1. ஸ்வப்ரபந்தங்களிலே—ஸ்வபுராணங்களிலே யென்றபடி.

* தி-வா-க-உ-க0, † தி-வா-க-க0-அ, ‡ தி-வா-க0-கூ-ச. § திருப்பல்லாண்டு-ச. ** பெ-ஆ-தி-ரு-கங. †† பெ-மா-தி-உ-ச. ‡‡ பெ-மா-தி-க0-கக. §§ நாலாந்திரு-வ-க. *** தி-ச-எஎ. *† தி-மொ-க-க-க. *‡ சி-தி-ரு0. *§ முதல்-தி-ருஎ.

*"நாராயணவென்றோவாதுரைக்கு முறையுண்டே" என்றும், † "ஞானச்சுடர் விளக்கேற்றினேன் நாரணற்கு" ‡ "நாரணன்தன் நாமங்கள்" § "பாகற்கண்டேன் நாரணனைக்கண்டேன்" என்றும், ** "நாமம்பல சொல்லி நாராயணா" என்றும் முதலாழ்வார்களும் அருளிச் செய்கையாலும், †† "மயர்வறமதிநல மருளினன்" என்கிறபடியே நிர்ஹேதுக பகவத் கடாக்ஷத்தாலே 1. ஸமதிகத ஸமஸ்த வஸ்து வாஸ்தவரான ஆழ்வார்களெல்லாரும் விரும்பினார்கள். இதரமந்த்ரங்களை அநாதரித்து இத்தையே தங்களுக்குத் தஞ்சமாக அநுஸந்தித்து, உபதேசவேளையிலும் தங்களைப் பற்றினவர்களுக்கும் இத்தையே உஜ்ஜீவநஹேதுவாக உபதேசித்துப்போருகையாலே, அவ்வாழ்வார்களைப் பின்சென்ற ஆசார்யர்களெல்லாரும் விரும்பினார்களென்கை.

இத்தால், மந்த்ராந்தரங்களிற்காட்டில் இம்மந்த்ரத்துக்கு உண்டான வைபவம் சொல்லிற்றாயிற்று.

இனி, வாச்யந்தன்னிலும் இதுக்கு உண்டான வைபவத்தை அருளிச் செய்கிறார்

**மூ.-(கச) வாச்யப்ரபாவம் போல் அன்று, வாசக ப்ரபாவம்.**

(வ்யா.) 'வாச்யப்ரபாவம்போலன்று, வாசகப்ரபாவம்' என்று. அதாவது-இதுக்கு 2. வாச்யனாயிருந்துள்ள ஈச்வரனுடைய பெருமை போலன்று, தத்வாசகமான இதன் பெருமை என்றபடி.

'அதுதான் ஏது?' என்ன, அருளிச்செய்கிறார்

**மூ.-(கரு) அவன் தூரஸ்தனானாலும் இது கிட்டிநின்று உதவும்.**

(வ்யா.) 'அவன் தூரஸ்தனானாலும் இது கிட்டிநின்று உதவும்' என்று. அதாவது இதுக்கு வாச்யனானவன் 3. ஸந்நிஹிதனன்றிக்கே

* முதல்-தி-கூ௰. † இரண்-தி-க. ‡ இரண்-தி-௨௦. § இரண்-தி-அக. ** மூண்-தி-அ. †† தி-க-கக.

1. ஸமதிகத - செவ்வையாக அடைந்த, ஸமஸ்தவஸ்துவாஸ்தவர்-எல்லாம் பொருள்களையும் பற்றிய யதார்த்தஜ்ஞாநமுள்ளவர். 2. வாச்யன்- சொல்லப்படுபவன்: அர்த்தமாக இருப்பவன். 3. ஸந்நிஹிதன் - அருகிலிருப்பவன்.

தூரஸ்தனுயிருந்தகாலத்திலும், வாசகமான இது[1] ஆஸந்நமாய்நின்று, தன்னை 2. வசித்தவர்கள் அபேக்ஷிதங்களை ஸாதித்துக் கொடுக்குமென்கை.

'இப்படி வாச்யன் தூரஸ்தனுயிருக்க, வாசகம் உதவின இடம் உண்டோ?' என்ன, அருளிச்செய்கிறார்

**சூ.-(௧௬) த்ரௌபதிக்கு ஆபத்திலே புடைவை சுரந்தது திருநாமமிறே.**

(வ்யா.) 'த்ரௌபதிக்கு ஆபத்திலே புடைவைசுரந்தது திருநாமமிறே' என்று. அதாவது-3. மஹாஸதஸ்ஸிலே து:ஶாஸநன் **வஸ்த்ராபஹாரம்** பண்ணுகிறபோது (௪௫) "𑌮𑌹𑌤𑍍𑌯𑌾𑌪𑌦𑌿 𑌸𑌂𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍇 𑌸𑍍𑌮𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑍋 𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 𑌹𑌰𑌿𑌃" [மஹத்யாபதி ஸம்ப்ராப்தே ஸ்மர்த்தவ்யோபகவாந்ஹரி:] என்று முன்பே **ஸ்ரீவஸிஷ்டமஹர்ஷி** சொல்லிவைத்ததை நினைத்து (௪௬) "𑌶𑌙𑍍𑌖𑌚𑌕𑍍𑌰𑌗𑌦𑌾𑌪𑌾𑌣𑍇 𑌦𑍍𑌵𑌾𑌰𑌕𑌾𑌨𑌿𑌲𑌯𑌾𑌚𑍍𑌯𑍁𑌤 । 𑌗𑍋𑌵𑌿𑌨𑍍𑌦 𑌪𑍁𑌣𑍍𑌡𑌰𑍀𑌕𑌾𑌕𑍍𑌷 𑌰𑌕𑍍𑌷 𑌮𑌾𑌂 𑌶𑌰𑌣𑌾𑌗𑌤𑌾𑌮𑍍" [ஶங்கசக்ரகதாபாணே த்வாரகாநிலயாச்யுத-கோவிந்த புண்டரீகாக்ஷ ரக்ஷமாம் ஶரணாகதாம்] என்று ஶரணம்புகுந்த த்ரௌபதிக்கு அவ்வாபத்திலே(௪௭) "𑌗𑍋𑌵𑌿𑌨𑍍𑌦𑍇𑌤𑌿 𑌯𑌦𑌾𑌕𑍍𑌰𑌨𑍍𑌦𑌤𑍍 𑌕𑍃𑌷𑍍𑌣𑌾 𑌮𑌾𑌂 𑌦𑍂𑌰𑌵𑌾𑌸𑌿𑌨𑌮𑍍" [கோவிந்தேதியதாக்ரந்தத் க்ருஷ்ணாமாம்தூரவாஸிநம்] என்கிறபடியே வாச்யனான க்ருஷ்ணன் தூரஸ்தனுயிருக்கச்செய்தேயும் வஸ்த்ரத்தை வர்த்திப்பித்துக்கொடுத்தது, அவ்வவதாரத்துக்கு வாசகமான கோவிந்தனென்கிற திருநாமமிறே யென்கை. 4. நாராயணஶப்தார்த்தத்தில் ஏகதேஶத்துக்கு வாசகமான ஒருதிருநாமம் செய்தபடி கண்டால், இதன்ப்ரபாவம் 5. கிம்புநர்ந்யாயஸித்தமிறே யென்று கருத்து.

1. ஆஸந்நமாய - அருகிலிருப்பதாய். 2. வசித்தவர்கள் - சொன்னவர்கள். 3. மஹாஸதஸ்-பெரியஸபை. 4. 'திருமந்த்ரத்துக்கு ஏற்றஞ்சொல்லுகிற இந்தப்ரகரணத்தில் கோவிந்தஶப்தத்தினேற்றத்தைச் சொல்லுவதில் பயனென்?' என்று தோன்றும் ஶங்கைக்கு ஸமாதானம் அருளிச்செய்கின்றார் 'நாராயணஶப்தார்த்தத்தில்' இத்யாதியால். 5. கிம்புநர்ந்யாயமாவது-மலையைவிழுங்கின மஹார்த்தவனுக்கு கதவுஎவ்வளவு? என்றதுபோலவருவது.

இன்னம் ஒருப்ரகாரத்தாலே இதன் வைபவத்தை அருளிச்செய்கிறார்

**மூ.-(௭) சொல்லும் க்ரமம் ஒழியச் சொன்னாலும் தன்ஸ்வரூபம் கெட நில்லாது.**

(வ்யா.) 'சொல்லும்க்ரமம் ஒழியச் சொன்னாலும்' என்று தொடங்கி. அதாவது - ஏதேனும் ஒருமந்த்ரமும் தன்னைத் தஞ்சமாக விஸ்வஸித்துச் சொன்னவர்களுக்கு ஒழியத் 1. தன் கார்யம் செய்யாதே யாகிலும், இது அங்ஙனன்றிக்கே தன்னைத் தஞ்சமாக விஸ்வஸித்துச் சொல்லுகையாகிற க்ரமம் ஒழிய, (௨௮) "ஸாங்கேத்யம் பாரிஹாஸ்யம் வா ஸ்தோபம் ஹேலநமேவ வா" [ஸாங்கேதயம் பாரிஹாஸ்யஞ்ச ஸ்தோபம் ஹேலநமேவவா] என்கிறபடியே சொல்லிலும், சொன்னவர்களுக்கு ரக்ஷகமாகையாகிற தன் ஸ்வரூபத்தில் நழுவில்லாதென்கை.

இனி, இதன் ஸர்வாபேக்ஷிதப்ரதத்வமாகிற வைபவத்தை அருளிச்செய்கிறார்

**மூ.-(௮) இதுதான் "குலந்தரும்" என்கிறபடியே எல்லா வபேக்ஷிதங்களையும் கொடுக்கும்.**

(வ்யா.) 'இதுதான்' என்று தொடங்கி. அதாவது-இம்மந்த்ரந்தான் * 2."குலந்தரும்" என்றுதொடங்கி ஆழ்வார் அருளிச்செய்தபடியே, அதிகாராநுகுணமான அபேக்ஷிதங்களையெல்லாம் கொடுக்குமென்கை.

அத்தை விஶதீகரிக்கிறார்

**மூ.-(௯) ஐஶ்வர்ய கைவல்ய பகவல்லாபங்களை ஆசைப்பட்டவர்களுக்கு அவற்றைக் கொடுக்கும்.**

(வ்யா.) 'ஐஶ்வர்ய' இத்யாதியாலே. அதாவது- (௨௯) "நாராயணேதி ஐஶ்வர்யம் ஸமக்ராம் பரமாத்மதா । கைவல்யம்

---

* பெ-தி-மொ-க-க-க.

1. தன்கார்யம்-ரக்ஷணம். 2. குலந்தரும் - ஶேஷத்வஜ்ஞாநமாகிற குலத்தைத் தரும்.

𑌭𑌗𑌵𑌨𑍍𑌤𑌞𑍍𑌚 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑍋𑌽𑌯𑌂 𑌸𑌾𑌧𑌯𑌿𑌷𑍍𑌯𑌤𑌿" [ஐஹலௌகிக மைஶ்வர்யம் ஸ்வர்க்காத்யம் பாரலௌகிகம் - கைவல்யம் பகவந்தஞ்ச மந்த்ரோயம் ஸாதயிஷ்யதி] என்கிறபடியே ஐஹிகமாயும் 1.பாரலௌகிகமாயுமிருக்கும் ஐஶ்வர்யத்தையும் 2. ஆத்மப்ராப்திரூபமான கைவல்யத்தையும், பரமபுருஷார்த்தமான பகவல்லாபத்தையும் ஆசைப்பட்ட அதிகாரிகளுக்கு ஜபஹோமாதிகளாலே ஸ்வயம் ஸாதநமாய் நின்று, அவ்வோபுருஷார்த்தங்களைக் கொடுக்கு மென்கை.

இனி கர்மாத்யுபாய ஸஹகாரித்வரூபமான இதன் வைபவத்தை அருளிச்செய்கிறார்

**சூ.-(20) கர்மஜ்ஞாநபக்திகளிலே இழிந்தவர்களுக்கு விரோதியைப் போக்கி அவற்றைத் தலைக்கட்டிக் கொடுக்கும்.**

(வ்யா.) 'கர்மஜ்ஞாந' இத்யாதியாலே. அதாவது - கர்மயோகத்தில் இழிந்தவர்களுக்கு ஜபஹோமாதிகளாலே தன்னை ஸஹாயமாகக்கொள்ளுமளவில், கர்மயோகாரம்ப விரோதியான பாபத்தைப் போக்கி, அந்தக்கர்மத்தினுடைய 3. அவிச்சேதாபாதகமாய்க் கொண்டு அத்தைத் தலைக்கட்டிக்கொடுக்கும். ப்ரதமத்திலே, ஜ்ஞாநயோகத்திலே இழிந்தவர்களுக்குத் தன்னை ஸஹாயமாகக் கொள்ளுமளவில், கர்மஸாத்யமான 4. ஜ்ஞாநாரம்பவிரோதி பாபநிவ்ருத்தியைப் பண்ணி அந்தஜ்ஞாநத்துக்கு நாடோறும் அதிஶயத்தைப்பண்ணுநின்றுகொண்டு, அதனைத் தலைக்கட்டிக் கொடுக்கும். பக்தியோகத்திலே இழிந்தவர்களுக்குத் தன்னை ஸஹாயமாகக் கொள்ளுமளவில், பக்தியோகாரம்பவிரோதியான பாபத்தைப்போக்கிப் பக்திவிவ்ருத்திஹேதுவாய்க்கொண்டு அத்தைத் தலைக்கட்டிக் கொடுக்கு மென்கை.

5. இங்ஙனன்றிக்கே, ப்ரபந்நர்க்கு இது செய்யும் உபகாரவைபவத்தை அருளிச்செய்கிறார்

---

1. பாரலௌகிகம் - பரலோகத்தில் உண்டாகுவது. 2. ஆத்மப்ராப்தி - ஆத்மா தன்னைத்தானே யநுபவிக்கப்பெறுகை. 3. அவிச்சேதாபாதகமாய்-நடுவில் விச்சித்தி[தடை] வராமையைச்செய்வதாய். 4. ஜ்ஞாநாரம்பவிரோதி-ஜ்ஞாநயோகாரம்பத்துக்கு விரோதி. 5. இங்ஙனன்றிக்கே-ஸ்வயத்நஸாத்யங்களான கர்மாதி உபாயங்களிலே இழிகையன்றிக்கே என்றபடி.

**மூ.–(உக) ப்ரபத்தியிலே இழிந்தவர்களுக்கு ஸ்வரூபஜ்ஞாநத்தைப் பிறப்பித்துக் காலக்ஷேபத்துக்கும் போகத்துக்கும் ஹேதுவாயிருக்கும்.**

(வ்யா.) 'ப்ரபத்தியிலே' என்று தொடங்கி. அதாவது-கீழ்ச்சொன்னவைபோலே துஸ்ஸகமுமாய் ஸ்வரூபவிருத்தமுமாய் இருக்கையன்றிக்கே1. ஸுஸகமுமாய் 2. ஸ்வரூபாநுரூபமுமான ப்ரபத்யுபாயத்திலே இழிந்தவர்களுக்கு, தத நுரூபமான பகவத்பாரதந்த்ர்யரூப ஸ்வரூபஜ்ஞாநத்தை விசதமாகப் பிறப்பித்து அர்த்தாநுஸந்தாநாதிகளாலே போதுபோக்குகைக்கும் ஹேதுவாய், * "எனக்கென்றுந் தேனும்பாலுமமுதுமாய திருமால்திருநாமம்" என்கிறபடியே 3. ப்ரதிபாத்யவஸ்துவைப்போலே ஸ்வயம்போக்யமாயிருக்கையாலே போகத்துக்கும் ஹேதுவாயிருக்குமென்கை.

இனி 4. ஜ்ஞாதவ்ய ஸகலார்த்த ப்ரதிபாதகத்வமாகிற இதன் வைபவத்தை அருளிச்செய்கிறார்

**மூ.–(உஉ) "மற்றெல்லாம் பேசிலும்" என்கிறபடியே அறிய வேண்டும் அர்த்தமெல்லாம் இதுக்குள்ளே உண்டு.**

(வ்யா.) 'மற்றெல்லாம் பேசிலும்' என்று தொடங்கி. அதாவது-"† நின் திருவெட்டெழுத்துங் கற்று-மற்றெல்லாம் பேசிலும்" என்கிறபடியே, ஆத்மோஜ்ஜீவநத்துக்கு உடலாக அறியவேண்டும் அர்த்தவிசேஷங்களெல்லாம் இம்மந்த்ரத்துக்குள்ளே உண்டென்கை.

'அறியவேண்டும் அர்த்தமெல்லாம் ஆகிறது எது?' என்னும் ஆகாங்க்ஷையிலே அருளிச்செய்கிறார்

---

* பெ-மொ-சு-கo-சு. † பெ-தி-மொ-அ-கo-ரு.

1. ஸுஸகம்-ஸுலபமாகச் செய்யக்கூடியது. 2. ஸ்வரூபாநுரூபம்-பாரதந்த்ர்யத்தையுடைய ஆத்மஸ்வரூபத்துக்கு ஏற்றது. 3. ப்ரதிபாத்யவஸ்து-திருமந்திரத்தாற் ப்ரதிபாதிக்கப்படுகின்ற எம்பெருமானாகிய வஸ்து. 4. ஜ்ஞாதவ்யஸகலார்த்தமென்றது-அர்த்தபஞ்சகத்தை; அவை-ஜீவாத்மஸ்வரூபம் முதலியன.

**மூ.-(௨௩) அதாவது - அஞ்சர்த்தம்.**

(வ்யா.) 'அதாவது அஞ்சர்த்தம்' என்று. ஸ்வஸ்வரூப பரஸ்வரூப புருஷார்த்தஸ்வரூப உபாயஸ்வரூப விரோதிஸ்வரூபங்களாகிற அர்த்தபஞ்சகமும் என்றபடி. (ரு0) "𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌸𑍍𑌯 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌰𑍂𑌪𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍁𑌶𑍍𑌚 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌗𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 । 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍍𑌯𑍁𑌪𑌾𑌯𑌂 𑌫𑌲𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍇𑌸𑍍𑌤𑌥𑌾 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿𑌵𑌿𑌰𑍋𑌧𑌿 𑌚 ॥ 𑌵𑌦𑌨𑍍𑌤𑌿 𑌸𑌕𑌲𑌾 𑌵𑍇𑌦𑌾𑌃 𑌸𑍇𑌤𑌿𑌹𑌾𑌸𑌪𑍁𑌰𑌾𑌣𑌕𑌾𑌃 । 𑌮𑍁𑌨𑌯𑌶𑍍𑌚 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑍋 𑌵𑍇𑌦𑌵𑍇𑌦𑌾𑌰𑍍𑌥𑌵𑍇𑌦𑌿𑌨𑌃" [ப்ராப்யஸ்யப்ரஹ்மணோரூபம் ப்ராப்துஶ்சப்ரத்யகாத்மந: - ப்ராப்த்யுபாயம்பலம் ப்ராப்தே: ததாப்ராப்திவிரோதிச—வதந்தி ஸகலாவேதாஸ் ஸேதிஹாஸபுராணகா:—முநயஶ்சமஹாத்மாநோ வேதவேதார்த்தவேதிந:] என்கிறபடியே, ஸகலவேதஶாஸ்த்ரங்களும் ப்ரதிபாதிப்பது இவ்வர்த்தபஞ்சகத்தையு மாகையாலே, தத்ஸங்க்ரஹமான இம்மந்த்ரத்துக்கும் ப்ரதிபாத்யம் இதுவேயிறே. இம்மந்த்ரந்தான் - ப்ரணவத்தாலே 1.ப்ரத்யகாத்ம ஸ்வரூபத்தையும், நமஸ்ஸாலே விரோத்யுபாய ஸ்வரூபங்களையும், நாராயணபதத்தாலே 2.பரஸ்வரூபத்தையும், அதில் சதுர்த்தியாலே 3.பலஸ்வரூபத்தையும் ப்ரதிபாதிக்கக் கடவதாயிறே இருப்பது.

இம்மந்த்ரார்த்தவைபவத்தை அருளிச்செய்கிறார் மேல்

**மூ.-(௨௪) பூர்வாசார்யர்கள் இதில் அர்த்தம் அறிவதற்கு முன்பு, தங்களைப் பிறந்தார்களாக நினைத்திரார்கள்; இதில் அர்த்தஜ்ஞாநம் பிறந்த பின்பு, "பிறந்த பின் மறந்திலேன்" என்கிறபடியே இத்தையொழிய வேறொன்றால் காலக்ஷேபம் பண்ணியறியார்கள்.**

(வ்யா.) 'பூர்வாசார்யர்கள்' என்று தொடங்கி. அதாவது-நாதயாமுந யதிவராதிகளான நம்பூர்வாசார்யர்கள், * "4. அன்றுநான்

---

* திருச்ச-௬௪.

1. ஸ்வம் ப்ரதி அஞ்சதி (தன்னைக் குறித்துத்தான் ப்ரகாஶிப்பது) என்று ப்ரத்யக்சப்தத்துக்கு வ்யுத்பத்தி யாகையாலே, ப்ரத்யகாத்மா என்றது-ஜீவாத்மாவைக் காட்டும். 2. பரஸ்வரூபம்- பரமாத்மஸ்வரூபம். 3.பலஸ்வரூபம்-புருஷார்த்தஸ்வரூபம். 4. அன்றுநான்பிறந்திலேன்-இந்தச்சேதநனது

பிறந்திலேன்" என்கிறபடியே, இம்மந்த்ரத்தில் அர்த்தம்அறிவதற்கு முன்பு தங்களைப் பிறந்தார்களாக நினைத்திரார்கள்; இதில் அர்த்த ஜ்ஞாநம் தங்களுக்கு உண்டானபின்பு *"பிறந்தபின் மறந்திலேன்" என்று ஆழ்வார் திவ்யஸூக்தியிற் சொல்லுகிறபடியே இம்மந்த்ரார்த்தத்தை யொழிய மற்றொன்றால் காலக்ஷேபம் பண்ணியறியார்களென்கை. வேதசாஸ்த்ரங்கள், ஆழ்வாரருளிச்செயல்கள் இவற்றால் போதுபோக்கும்போதும் இம்மந்த்ரார்த்தத்தை யுட்கொண்டே அநுஸந்திக்கையாலே, 'இத்தை யொழிய வேறொன்றால் காலக்ஷேபம் பண்ணி யறியார்கள்' என்னத் தட்டில்லை.

1.'வாசகசக்தி 2 ஸர்வத்தையும் ஸாதித்துக்கொடுக்கவற்றாயிருக்க, இதனுடைய 3.வாச்யத்திலே இவர்களூன்றுகைக்கு ஹேது ஏது?' என்ன, அருளிச்செய்கிறார்

மூ.-(உரு) வாசகத்திற்காட்டில் வாச்யத்திலே ஊன்றுகைக்குஅடி – ஈச்வரனே உபாயோபேயமென்று நினைத்திருக்கை.

(வ்யா.) 'வாசகத்திற்காட்டில்' என்று தொடங்கி. அதாவது-ஸர்வபலத்துக்கும் ஸ்வயம் ஸாதநமாயும், ஸாதநாந்தரங்களுக்கும் ஸஹகாரியாய்நின்று தலைக்கட்டிக் கொடுத்தும் போருகிற இதனுடைய வாசகசக்திதானே அமைந்திருக்கச்செய்தே, அதிலுங்காட்டிற் கீழ்ச் சொன்னபடியே இம்மந்த்ரத்தினுடைய வாச்யத்திலே பூர்வாசார்யர்களூன்றுகைக்கு அடி - 4.உபேயாந்த்ரபரராய் இத்தை ஸாதநமாகக் கொண்டு ஸாதித்தல், 5.உபாயாந்தரபரராய் இத்தை 6. ஸஹகாரியாகக்கொள்ளுதல் செய்யுமவர்களைப் போலன்றிக்

---

உஜ்ஜீவநார்த்தமாக ஈச்வரன் க்ருஷிபண்ணுகிற அந்தக்காலத்திலே நான் ஜ்ஞாநரூபஜந்மத்தை யடைந்தேனில்லை,பிறந்தபின் மறந்திலேன்-ஜ்ஞாநஜந்மத்தை யடைந்தபின்பு அதற்கு ஒருகேடுஉண்டாகப்பெற்றிலேன்என்றபடி.

1. வாசகசக்தி-சப்தசக்தி. 2. ஸர்வத்தையும் - ஐச்வர்யம் முதலான ஸகலத்தையும். 3. வாச்யம்-அர்த்தம். 4. உபேயாந்தரம்-பகவானைத் தவிர வேறொரு உபேயம்; உபேயம் - உபாயத்தால் அடையவேண்டிய வஸ்து. 5. உபாயாந்தரபரர்-ஈச்வரனைத் தவிரக் கர்மயோகம் முதலியவற்றை உபாயங்களாகக் கொள்ளுவார். 6. ஸஹகாரி-ஒத்தாசை.

* திருச்ச-கூச.

கே, உபாயோபேயங்களிரண்டும் ஈஶ்வரனே யென்று ப்ரதிபத்தி பண்ணி யிருக்கை யென்றபடி.

ஆக, "திருமந்த்ரத்தினுடைய சீர்மைக்குப் போரும்படி" என்று தொடங்கி இவ்வளவும் 1. வாய்வந்தபடி அநுஸந்திக்கவொண்ணாத படியான இதனுடைய கௌரவத்தையும், ஈஶ்வரன் தானே ஶிஷ்ய னுமாய் ஆசார்யனுமாய் நின்று வெளியிட்டருளுகையால் வந்த ஏற் றத்தையும், ஸகலஶாஸ்த்ரங்களிலும் ஸகலமந்த்ரங்களிலும் 2. வாச்ய ந்தன்னிலுங் காட்டில் இதுக்கு உண்டான பெருமையையும், 3. அக் ரமமாகச் சொல்லிலும் தன்கார்யம் செய்யும் ஆதிக்யத்தையும், அபே க்ஷிதஸகலபலப்ரதத்வரூபமாஹாத்ம்யத்தையும, கர்மாத்யுபாயஸஹ காரித்வரூபமான உத்கர்ஷத்தையும், ஜ்ஞாதவ்யஸகலார்த்தப்ரதிபா தகதயா வந்த மாஹாத்ம்யத்தையும், ஏதத்ப்ரதிபாத்ய அர்த்தகௌ ரவவிஶேஷத்தையும் அருளிச்செய்கையாலே, இம்மந்த்ரத்தினுடைய வைபவத்தை எல்லாரும் அறியும்படி தர்ஶிப்பித்தருளினாராயிற்று.

இனிமேல் இம்மந்த்ரத்துக்கு, வாக்யார்த்தம் இரண்டுபடியாக அருளிச்செய்கிறார்

**மூ.-(உசு) இதுதன்னில்சொல்லுகிற அர்த்தம்-ஸ்வ ரூபமும் ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யமும்; ஸ்வரூபமும் உபாயமும் பலமு மென்னவுமாம்.**

(வ்யா.) 'இதுதன்னில்' என்று தொடங்கி. அதாவது-இம்மந்த் ரந் தன்னில் சொல்லுகிற அர்த்தம்-இவ்வாத்மாவினுடைய ஶேஷத்வ பாரதந்த்ர்யங்களாகிற ஸ்வரூபமும், அந்த 4. ஸ்வரூபத்துக்கு அநுரூப மாயிருந்துள்ள கைங்கர்யமாகிற ப்ராப்யமும்; அன்றிக்கே, ஶேஷத்வ மாகிற ஸ்வரூபமும், அந்த ஸ்வரூபாநுரூபமான உபாயமும், உபாய

1. வாய்வந்தபடி-வாய்க்குவந்தபடி; ப்ரீதியில்லாமல் என்றபடி. 2. வாச்யம்-அர்த்தமானஎம்பெருமான். 3. அக்ரமமாகச் சொல்லிலும்-இத னிடத்துப்ப்ரீதியில்லாமலும் அநதிகாரிகளின் செவியிற்படும்படியும் சொன்ன லும் என்றபடி. 4. ஸ்வரூபத்துக்கு அநுரூபமாயிருந்துள்ள கைங்கர்யம்-ஸ்வப்ரயோஜநபுத்தியும் ஸ்வகர்த்ருத்வபுத்தியும் நீங்கிக் கேவலபகவந்மு கோல்லாஸார்த்தமாகச் செய்யப்படும் கைங்கர்யம்.

லப்யமான பலமும் என்று சொல்லவுமா மென்கை. 1. இதில் ப்ரதம யோஜனையில் 2. ப்ரணவ நமஸ்ஸுக்களாலே ஸ்வரூபமும், நாராயணபதத்தாலே ப்ராப்யமும் சொல்லுகிறது. அநந்தரயோஜனையில் ப்ரணவத்தாலே ஶேஷத்வமும், 3. நமஸ்ஸாலே உபாயமும், நாராயணபதத்தாலே பலமும் சொல்லுகிறது.

'பலவேஷந்தா னிருக்கும்படி எங்ஙனே?' என்ன, அருளிச்செய்கிறார்

**ஸூ.–(உஎ) பலமிருக்கும்படி ப்ரமேயஶேகரத்திலும் அர்ச்சிராதிகதியிலும் சொன்னோம்.**

(வ்யா.) 'பலமிருக்கும்படி.' என்று தொடங்கி. அதாவது-இவ்வாத்மாவுக்கு ப்ராப்யமான பலந்தான் - அர்சிராதிமார்க்கத்தாலே பரமபதத்திலே போய்ப் பரிபூர்ண பகவதநுபவத்தைப் பண்ணி அவ்வநுபவஜநிதப்ரீதிப்ரேரிதனாய்க்கொண்டு பண்ணும் 4. அஶேஷஶேஷவ்ருத்திபாகையாலே, அது இருக்கும்படியை ஸங்க்ரஹேண ப்ரமேயஶேகரமாகிற ப்ரபந்தத்திலும், விஸ்தரேண அர்ச்சிராதிகதியாகிற ப்ரபந்தத்திலும் விஶதமாகச் சொன்னோம்; அவற்றிலே கண்டுகொள்வதென்கை.

இனி, இம்மந்த்ரத்துக்கு 5. ப்ரதிபதம அர்த்தம் அருளிச்செய்வதாகத் திருவுள்ளம்பற்றி, ப்ரதமம் இதனுடைய அக்ஷரஸங்க்யையையும, பதஸங்க்யையையும் அருளிச்செய்கிறார்

**ஸூ.–(உஅ) இதுதான்–எட்டுத்திருவக்ஷரமாய் மூன்று பதமாயிருக்கும்.**

(வ்யா.) 'இதுதான்' என்று தொடங்கி. அதாவது-இம்மந்த்ரந்தான் (ருக) "ஓமித்யேகாக்ஷரம், நம இதி த்வே அக்ஷரே, நாராய

---

1. இதில்-இவற்றில்:இந்த இரண்டுவிதயோஜனையில். 2.ப்ரணவத்தாலே ஶேஷத்வமாகிற ஸ்ரூபமும், நமஸ்ஸாலே பாரதந்த்ர்யமாகிற ஸ்வரூபமுமென்கை. ஸகண்டமான நமஸ்ஸு 'ம: ந' [எனக்குஉரியன் அன்று] என்று பிரிந்து, ஸ்வரக்ஷணத்தில் தான் அஶக்தனென்பதைத் தெரிவிப்பதன் மூலமாக, ஈஶ்வரனுக்குப் பரதந்த்ரனென்பதைத் தெரிவிக்குமென்று அறிக. 3. நமஶ்ஶப்தம் ஸ்வஸ்வாதந்த்ர்யநிவ்ருத்தியாகிற அர்த்தபலத்தாலே ஈஶ்வரனே உபாயமென்று அகாரத்திற்சொல்லப்பட்ட ரக்ஷணத்திற்குஈஶ்வரனே காரணனென்பதைக் காட்டும் என்றபடி. 4. அஶேஷஶேஷவ்ருத்தி-ஸமஸ்தமான அடிமைத்தொழில். 5. ப்ரதிபதம்-பதந்தோறும்.

ஞாயேதி பஞ்சாக்ஷராணி, ஊத்யஷ்டாக்ஷரம் ஊகுலாமாயத்ரீசேதி" [ஓமித்யேகாக்ஷரம், நம இதி த்வே அக்ஷரே, நாராயணாயேதி பஞ்சாக்ஷராணி, இத்யஷ்டாக்ஷரஞ் சந்தஸா காயத்ரீசேதி] (நிஉ) "ஓமித்யக்ரே வ்யாஹரேத், நம இதி பஶ்சாத், நாராயணாயேத்யுபரிஷ்டாத்" [ஓமித்யக்ரே வ்யாஹரேத், நம இதி பஶ்சாத், நாராயணாயேத்யுபரிஷ்டாத்] என்கிறபடியே எட்டுத்திருவக்ஷரமாய், மூன்றுபதமாயிருக்குமென்கை. இதனுடைய அஷ்டாக்ஷரத்வம் சொல்லுகிறவிடத்திலே, (நிக) "ஓமித்யேகாக்ஷரம்" [ஓமித்யேகாக்ஷரம்] என்று ப்ரணவத்தை ஓரக்ஷரமாகவும் (நிக) "நம இதி த்வே அக்ஷரே" [நமஇதி த்வேஅக்ஷரே] என்று நமஸ்ஸை இரண்டக்ஷரமாகவும் (நிக) "நாராயணாயேதி பஞ்சாக்ஷராணி" [நாராயணாயேதிபஞ்சாக்ஷராணி] என்று நாராயணபதத்தை அஞ்சக்ஷரமாகவும் ஶ்ருதி சொல்லுகையாலே, ஸமஸ்தபதமான நாராயணபதத்தில், நாரபதத்தைப் பிரித்து ஷடக்ஷரமாக்கி, ப்ரணவத்தையொழிய அஷ்டாக்ஷரத்வம் சொல்லுமவர்களுடைய பக்ஷம் அவைதிகமாகையாலே அநாதரணீயமாகக் கடவது.

'இதில் பதத்ரயமும் எவ்வர்த்தத்தைச் சொல்லுகிறது?' என்னும் ஆகாங்க்ஷையிலே,

**ஸூ.-(உகூ) மூன்று பதமும் மூன்று அர்த்தத்தைச் சொல்லுகிறது.**

(வ்யா.) 'மூன்றுபதமும் மூன்றர்த்தத்தைச் சொல்லுகிறது' என்கிறார்.

அவ்வர்த்தங்கள்தம்மை விஶதமாக அருளிச்செய்கிறார்

**ஸூ.-(௩௦) அதாவது - ஶேஷத்வமும், பாரதந்த்ர்யமும், கைங்கர்யமும்.**

(வ்யா.) 'அதாவது - ஶேஷத்வமும், பாரதந்த்ர்யமும், கைங்கர்யமும்' என்று. 'ஸ்வரூபமும் ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யமும்' என்று முதற்சொன்ன வாக்யார்த்தம் இத்தை நினைத்திறே.

'இப்பதத்ரயத்திலும் ப்ரதமபதந்தான் எது?' என்ன,

**மூ.-(௩௧) இதில் முதற்பதம் ப்ரணவம்.**

(வ்யா.) '*இதில் முதல்பதம் ப்ரணவம்*' என்கிறார். (௫௨) "𑌓𑌮𑌿𑌤𑍍𑌯𑌗𑍍𑌰𑍇 𑌵𑍍𑌯𑌾𑌹𑌰𑍇𑌤𑍍" [*ஓமித்யக்ரே வ்யாஹரேத்*] என்றிறே ஶ்ருதி சொல்லிற்று. ஸ்ம்ருதியும், (௫௩) "𑌪𑍍𑌰𑌣𑌵𑌾𑌦𑍍𑌯𑌂𑌨𑌮𑍋𑌮𑌧𑍍𑌯𑌂 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌪𑌦𑌾𑌨𑍍𑌤𑌿𑌮𑌮𑍍 । 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌮𑌷𑍍𑌟𑌾𑌕𑍍𑌷𑌰𑌂𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌕𑌰𑌂 𑌨𑍃𑌣𑌾𑌮𑍍" [*ப்ரணவாத்யம்நமோமத்யம் நாராயணபதாந்திமம்-மந்த்ரமஷ்டாக்ஷரம் வித்யாத் ஸர்வஸித்திகரம் ந்ருணாம்*] என்றதிறே.

*இனி, ப்ரணவத்துக்கு அர்த்தம் அருளிச்செய்வதாக, இதனுடைய அக்ஷரத்ரயாத்மகதையை அருளிச்செய்கிறார்*

**மூ.-(௩௨) இது 'அ' என்றும் 'உ' என்றும் 'ம' என்றும் மூன்று திருவக்ஷரம்.**

(வ்யா.)'*இது அ என்றும், உ என்றும், ம என்றும் மூன்று திருவக்ஷரம்*' என்று. *இப்ரணவந்தான்,*[1] *அஸம்ஹிதாகாரத்தாலே மூன்றக்ஷரமாய், மூன்றுபதமாய்,*[2] *மூன்றர்த்தப்ரகாஶகமாய்,* [3] *ஸம்ஹிதாகாரத்தாலே ஏகாக்ஷரமாய், ஏகபதமாய், ஏகார்த்தப்ரகாஶகமாயிறே இருப்பது.*

*இந்தஅக்ஷரத்ரயத்திறுடையவும் உத்பத்திக்ரமத்தை ஸத்ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார்*

**மூ.-(௩௩) மூன்றுதாழியிலே தயிரை நிறைத்துக் கடைந்து வெண்ணெய் திரட்டினாற்போலே மூன்று வேதத்திலும் மூன்றக்ஷரத்தையும் எடுத்தது.**

---

1. "*ஓமித்யேகாக்ஷரம்*" என்று ஶ்ருதி சொன்னதற்கு விரோதமாக, மூன்று திருவக்ஷரமென்று அருளிச்செய்தது எங்ஙனே பொருந்தும்?' என்ற கேள்விக்கு உத்தரம் அருளிச்செய்கிறார் '*அஸம்ஹிதாகாரத்தாலே*' என்று தொடங்கி. அஸம்ஹிதாகாரம்-பிரிந்திருக்கும் நிலையிலுள்ள ரூபம். 2. லுப்த சதுர்த்தியோடுகூடின அகாரம் - பகவச்சேஷத்வத்தையும், உகாரம் - அநந்யார்ஹத்வத்தையும், மகாரம் - அநந்யார்ஹபகவச்சேஷத்வத்துக்கு ஆஶ்ரயமாய் ஜ்ஞாதாவான ஜீவனையும் காட்டுமென்க. 3. ஸம்ஹிதாகாரம் - சேர்ந்திருக்கும் நிலையிலுள்ள ரூபம்.

(வ்யா.) 'மூன்றுஜாழியிலே' என்று தொடங்கி. (௫௪) "பூரிதி ருக்வேதாதஜாயத, புவ இதி யஜுர்வேதாத், ஸுவரிதி ஸாமவேதாத், தானி ஶுக்ராண்யப்யதபத், தேப்யோ(அ)பிதப்தேப்யஸ்த்ரயோ வர்ணா அஜாயந்த, அகார உகார மகார இதி, தானேகதா ஸமபரத் ததேததோமிதி" [பூரிதிருக்வேதாதஜாயத, புவஇதி யஜுர்வேதாத், ஸுவரிதி ஸாமவேதாத், தானி ஶுக்ராண்யப்யதபத், தேப்யோ(அ)பிதப்தேப்யஸ்த்ரயோ வர்ணா அஜாயந்த, அகார உகார மகார இதி, தானேகதா ஸமபரத் ததேததோமிதி] என்றும், (௫௫) "அகாரஞ்சாப்யுகாரஞ்ச மகாரஞ்ச ப்ரஜாபதி:। வேதத்ரயாந்நிரப்ருஹத் பூர்ப்புவஸ்ஸுவரிதீச" [அகாரஞ்சாப்யுகாரஞ்ச மகாரஞ்சப்ரஜாபதி:- வேதத்ரயாந்நிரப்ருஹத் பூர்ப்புவஸ்ஸுவரிதிச] என்றும் ஶ்ருதி ஸ்ம்ருதிகளிற் சொல்லுகிறபடியே ருக்யஜுஸ்ஸாமரூபமான வேதத்ரயத்தில் நின்றும், "பூ: புவ: ஸுவ:" என்கிற வ்யாஹ்ருதித்ரயத்தையும் தோற்றுவித்து, அந்தவ்யாஹ்ருதி த்ரயத்தையும் பொன் ஓடவைக்குமாபோலே தன்ஸங்கல்பத்தாலே ஓடவைத்து அவற்றில்நின்றும் அகார உகார மகாரங்களாகிற அக்ஷரங்கள் மூன்றும் அடைவே தோன்றும்படி பண்ணி, இப்படி ஸர்வேஶ்வரன் ஸமுத்தரித்தபடியைத் திருவுள்ளம்பற்றி, பாத்ரத்ரயகதமான தயிரைத் தனித்தனியே கடைந்து, தத்ஸாரமான வெண்ணெயை வாங்கித் திரட்டினாற்போலே, மூன்றுவேதத்திலும் மூன்றக்ஷரத்தையும் எடுத்தது என்கிறார்.

இத்தால் பலித்தத்தை அருளிச்செய்கிறார்

**ஸூ.-(௩௪) ஆகையால், இது ஸகலவேதஸாரம்.**

(வ்யா.) 'ஆகையால் இது ஸகலவேதஸாரம்' என்று. அதாவது - அக்ஷரத்ரயமும் ஒரோ வேதத்தினுடைய ஸாரமாக 1. ஸமுத்த்ருதமாகையாலே இவ்வக்ஷரத்ரயாத்மகமான ப்ரணவம் ஸகலவேதஸாரம் என்றபடி.

ஆக, "இது தன்னிற்சொல்லுகிற அர்த்தம்" என்று தொடங்கி இவ்வளவும் - இம்மந்த்ரத்தினுடைய வாக்யார்த்தத்தையும், அக்ஷர

1. ஸமுத்த்ருதம் - எடுக்கப்பட்டது.

ஸங்க்யையையும், பதஸங்க்யையையும், பதத்ரயமும் அர்த்தத்ரய ப்ரதிபாதகமென்னு மத்தையும், அதில் ப்ரதமபதம் இன்னதென்னு மத்தையும், அதுதான் அக்ஷரத்ரயாத்மகமா யிருக்கு மென்னுமத் தையும், அவ்வக்ஷரத்ரயமும் வேதத்ரயஸாரமாக உத்பந்ந மாகையா லே தத்ஸமுதாயமான ப்ரணவம் ஸகலவேதஸார மென்னுமத்தையும் அருளிச்செய்தாராயிற்று.

இனி, இவ்வக்ஷரத்ரயத்துக்கும் அடைவே அர்த்தம் அருளிச் செய்வதாகத் திருவுள்ளம்பற்றி, ப்ரதமம் அகாரார்த்தத்தை அருளிச்செய்கிறார்

**மூ.-(௩௫) 1. இதில் அகாரம்-ஸகலஶப்தத்துக்கும் காரணமாய் நாராயணபதத்துக்கு ஸங்க்ரஹமாயிருக் கையாலே, ஸகலஜகத்துக்கும் காரணமாய் ஸர்வரக்ஷக னை எம்பெருமானைச் சொல்லுகிறது.**

(வ்யா.) 'இதில் அகாரம்' என்று தொடங்கி. அதாவது - இவ்வ க்ஷரத்ரயத்திலும் வைத்துக்கொண்டு ப்ரதமாக்ஷரமான அகாரம் - (௫௯) 2. "𑌨𑌾𑌮𑌰𑍂𑌪𑌂 𑌚 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌕𑍃𑌤𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌚 𑌪𑍍𑌰𑌪𑌞𑍍𑌚𑌨𑌮𑍍 । 𑌵𑍇𑌦𑌶𑌬𑍍𑌦𑍇𑌭𑍍𑌯 𑌏𑌵𑌾𑌦𑍌 𑌦𑍇𑌵𑌾𑌦𑍀𑌨𑌾𑌂 𑌚𑌕𑌾𑌰 𑌸𑌃" [நாமரூபஞ்ச பூதாநாம் க்ருத்யாநாஞ்சப்ரபஞ்சநம் - வேதஶப்தேப்யஏவாதௌ

1. இந்த வாக்யத்துக்கு இரண்டு யோஜனை உண்டு; அவை வருமாறு:- முதல் யோஜனை: - 'நாராயணபதம்' ஸமஸ்தவஸ்து ஶரீரகனென்று தெரி விப்பதன் மூலமாக, ஈஶ்வரனே உபாதாநகாரண னென்று தெரிவித்தும் ஸர்வரக்ஷகனென்று தெரிவித்தும் போருகையாலே, அந்த நாராயண ஶப்தத்தின் ஸங்க்ரஹமான அகாரமும் - ஸகல ஶப்தத்துக்கும் காரணமா யிருக்குந் தனது தன்மையால் தன்னாற் ப்ரதிபாதிக்கப்படுபவன் ஸகல வஸ் துக்களுக்கும் காரணனென்பதையும், 'அவ-ரக்ஷணே' என்கிற தாதுவினடியா கப் பிறப்பதால் ரக்ஷகனென்பதையும் தெரிவிக்குமென்பது கருத்து. 'ஸகல ஶப்தத்துக்குங் காரணமாய்' என்ற மூலத்தின்பின் 'அவ-ரக்ஷணே' என்ற தாதுவிலிருந்து நிஷ்பந்நமாய்' என்று அத்யாஹரித்துக்கொள்ளவேணும். இரண்டாம் யோஜனை: - அகாரம் தான் ஸகல ஶப்தத்துக்கும் காரணமா யிருக்கையாலே ஸகலஜகத்காரணனை எம்பெருமானைச் சொல்லுகின்றது; நாராயணபத ஸங்க்ரஹமாயிருத்தலாலே ஸர்வரக்ஷகனை எம்பெருமானைச் சொல்லுகின்றது என்பது. 2. 'நாமரூபஞ்ச' என்பது முதல் நான்கு ப்ரமா ணங்கள்-அகாரம் ஸகல ஶப்தத்துக்குங் காரணமாகும் வழியை நிரூபிப்பன.

தேவாதீநாஞ்சகாரஸ:]என்கிறபடியே லௌகிகஸகலஶப்தங்களுக்கும் வேதம் காரணமாய், (௩எ) "𑌪𑍍𑌰𑌣𑌵𑌾𑌦𑍍𑌯𑌾𑌸𑍍𑌤𑌥𑌾𑌵𑍇𑌦𑌾𑌃" [ப்ரணவாத்யாஸ்ததாவேதா:] (௩அ) "𑌓𑌙𑍍𑌕𑌾𑌰𑌪𑍍𑌰𑌭𑌵𑌾𑌵𑍇𑌦𑌾𑌃" [ஓங்காரப்ரபவாவேதா:] இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே அந்தவேதங்களுக்கும் ப்ரணவம் காரணமாய், (௩௯) "𑌤𑌸𑍍𑌯𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌲𑍀𑌨𑌸𑍍𑌯" [தஸ்யப்ரக்ருதிலீநஸ்ய] என்கிறபடியே அந்தப்ரணவந்தனக்குத் தான் காரணமாயிருக்கையாலே (௪௦) "𑌅𑌕𑌾𑌰𑍋𑌵𑍈𑌸𑌰𑍍𑌵𑌵𑌾𑌕𑍍" [அகாரோவைஸர்வாவாக்] (௪௧) "𑌸𑌮𑌸𑍍𑌤𑌶𑌬𑍍𑌦𑌮𑍂𑌲𑌤𑍍𑌵𑌾𑌦𑌕𑌾𑌰𑌸𑍍𑌯𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌤𑌃" [ஸமஸ்தஶப்தமூலத்வா தகாரஸ்ய ஸ்வபாவத:] என்கிறபடியே ஸகலஶப்தத்துக்குங் காரணமாய், ஸர்வேஶ்வரன் ஸமஸ்தவஸ்துஶரீரதயா ஸர்வரக்ஷகனா யிருக்கும்படியை ப்ரதிபாதிக்கிற நாராயணபதத்துக்கு ஸங்க்ரஹமாயிருக்கையாலே (௪௨) "𑌯𑌤𑍋𑌵𑌾𑌇𑌮𑌾𑌨𑌿𑌭𑍂𑌤𑌾𑌨𑌿𑌜𑌾𑌯𑌨𑍍𑌤𑍇, 𑌯𑍇𑌨𑌜𑌾𑌤𑌾𑌨𑌿𑌜𑍀𑌵𑌨𑍍𑌤𑌿" [யதோவா இமாநிபூதாநிஜாயந்தே, யேநஜாதாநி ஜீவந்தி] (௪௩) "𑌸𑌰𑍍𑌵𑌸𑍃𑌜𑍍𑌯𑌸𑍍𑌯𑌸𑌰𑍍𑌗𑌕𑌰𑍍𑌤𑌾 𑌸𑌰𑍍𑌵𑌭𑌾𑌦𑍍𑌯𑌤𑍍𑌤𑌿𑌚𑌪𑌾𑌲𑍍𑌯𑌤𑍇𑌚" [ஸர்வஸ்ருஜ்யஸ்ஸசஸர்க்ககர்த்தா ஸர்வபாத்யத்திச பால்யதேச] இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே எல்லாஜகத்துக்குங் காரணமாய் எல்லார்க்கும் ரக்ஷகனுமிருக்கும் எம்பெருமானைச் சொல்லுகிறதென்கை. இத்தால், இவ்வக்ஷரத்தில் 1. ப்ரக்ருத்யர்த்தமான காரணத்வமும், தாத்வர்த்தமான ரக்ஷகத்வமும் சொல்லிற்றாயிற்று. இவ்வகாரத்துக்கு 2. நாராயணபதஸங்க்ரஹதயா ரக்ஷகவாசித்வம் சொல்லும்போதும், தாதுஸித்தவேஷத்தை அவலம்பித்தே சொல்லவேணுமிறே.

'ரக்ஷிக்கையாவதுதான் எது?' என்னும் ஆகாங்க்ஷையிலே அருளிச்செய்கிறார்

---

1. தான் ஸர்வஶப்தங்களுக்கும் ப்ரக்ருதியாயிருக்குந் தன்மைக்கு ஏற்பத் தனக்கு வாச்யனான [அர்த்தமான] ஈஶ்வரனும் ஸகல வஸ்துக்களுக்குங் காரணனவனென்பதும். 2. நாராயணபத ஸங்க்ரஹதயா ரக்ஷகவாசித்வம் சொல்லுவது - இரண்டாவது யோஜனையில்: அந்தயோஜனையிலும் அகாரத்துக்கு ரக்ஷகவாசித்வம் மூலத்திற் சொல்லப்படாமலிருந்தாலும், 'அவ' என்ற தாதுவிலிருந்து தோன்றிய ஶப்தமென்பதுபற்றியே அந்த அகாரத்துக்கு ரக்ஷகத்வம் சொல்லவேண்டியிருப்பது போலவே முதல் யோஜனையிலும் சொல்லிக்கொள்ளவேணுமென்பது வாக்யத்தின் கருத்து.

ஸூ.- (௩௬) ரக்ஷிக்கையாவது-விரோதியைப் போக்குகையும், அபேக்ஷிதத்தைக் கொடுக்கையும்.

(வ்யா.) 'ரக்ஷிக்கையாவது' என்று தொடங்கி. அதாவது-ரக்ஷகத்வந்தான் 1. அநிஷ்டநிவர்த்தகத்வ 2. இஷ்டப்ராபகத்வ ரூபேண த்விவிதமாகையாலே, ஈஶ்வரன் சேதநரை ரக்ஷிக்கையாவது அவர்களுக்கு அஸுகாவஹமான விரோதியைப் போக்குகையும், ஸுகாவஹமான அபேக்ஷிதத்தைக் கொடுக்கையும் என்கை.

'இவர்களுக்கு இவன் போக்கும் விரோதி எது? கொடுக்கும் அபேக்ஷிதம் எது?' என்ன, அருளிச்செய்கிறார்

ஸூ.- (௩௭) இவை யிரண்டும் சேதநர் நின்றநின்ற அளவுக்கு ஈடாயிருக்கும்.

(வ்யா.) 'இவையிரண்டும் சேதநர் நின்ற நின்ற அளவுக்கு ஈடாயிருக்கும்' என்று. 'சேதநர் நின்ற நின்ற அளவுக்கு ஈடாயிருக்கும்' என்றது - தத்தததிகார அநுகுணமாயிருக்கு மென்றபடி..

இதனை 3 வ்யக்தமாக அருளிச்செய்கிறார் மேல்:—

ஸூ.- (௩௮) ஸம்ஸாரிகளுக்கு விரோதி-ஶத்ருபீடாதிகள், அபேக்ஷிதம் - அந்நபாநாதிகள்; முமுக்ஷுக்களுக்குவிரோதி-ஸம்ஸாரஸம்பந்தம், அபேக்ஷிதம்-பரமபதப்ராப்தி; முக்தர்க்கும் நித்யர்க்கும் விரோதி - கைங்கர்ய ஹாநி, அபேக்ஷிதம்-கைங்கர்யவ்ருத்தி.

(வ்யா.) 'ஸம்ஸாரிகளுக்கு' இத்யாதி. அதாவது- 4. தேஹாத்மாபிமாநாதிகளும் ஶப்தாதிவிஷயாநுபவமுமே 5. யாத்ரையாயிருக்கும் ஸம்ஸாரிகளுக்கு நிவர்த்யமான விரோதி - ஶத்ருக்களால் வரும் நலிவு தொடக்கமானவை; ப்ராப்யமான அபேக்ஷிதம்-சோறு தண்ணீர் முதலானவை யென்கை. 'ஶத்ருபீடாதிகள்' என்கிற விடத்தில்

---

1. அநிஷ்டநிவர்த்தகத்வம் - அநிஷ்டங்களைப் போக்குபவனாகை. 2. இஷ்டப்ராபகத்வம்-இஷ்டங்களை அடையச்செய்பவனாகை. 3. வ்யக்தமாக-ஸ்பஷ்டமாக. 4. தேஹாத்மாபிமாநம்-தேஹமே ஆத்மா என்ற அபிமானம்; 'ஆதி' ஶப்தத்தால், ஸ்வஸ்வாதந்த்ர்யத்தை நினைக்கிறது. 5. யாத்ரை - போதுபோக்கு.

'ஆதி' ஶப்தத்தாலே 1 ஆதிவ்யாதி முதலானவற்றால் வரும் பீடைகளைச் சொல்லுகிறது. 'அங்கராகாதிகள்' என்கிறவிடத்தில் 'ஆதி' ஶப்தத்தாலே 2 ஸ்ரக் வஸ்த்ர ஆபரண அங்கராக அங்கராலிங்காதிகளைச் சொல்லுகிறது.

'முமுக்ஷுக்களுக்கு' இத்யாதி. அதாவது:—ஸம்ஸாரத்தில் 3 அடிக்கொதித்துப் பரமபதத்திலே போக ஆசைப்படாநிற்கும் முமுக்ஷுக்களுக்கு நிவர்த்யமான விரோதி- 4. *பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கும் அழுக்குடம்புமாய்க்கொண்டு இவ்விபூதியிலேயிருக்கையாகிற ஸம்ஸாரஸம்பந்தம்; ப்ராப்யமான அபேக்ஷிதம்- பகவதநுபவாதிகளுக்கு அநுகூலமான பரமபதத்தை ப்ராபிக்கையென்கை.

'முக்தர்க்கும்' இத்யாதி. அதாவது:—நிவ்ருத்தஸம்ஸாராயும் 5. அஸ்ப்ருஷ்டஸம்ஸாரகந்தராயும், 6. பகவதநுபவ ஜநிதப்ரீதிகாரித கைங்கர்யபரராயுமிருக்கும் முக்தர்க்கும் நித்யர்க்கும் விரோதி- 7. வகுத்தஶேஷியான ஸர்வேஶ்வரன் திருவடிகளிலே ஸ்வரூபாநுரூபமாகப் பண்ணிக்கொண்டு போரும் கைங்கர்யத்துக்கு வரும் 8. விச்சேதம்; அபேக்ஷிதம் - உத்தரோத்தரம் அடிமை செய்து செல்லுகையாகிற கைங்கர்யவ்ருத்தி யென்கை.

ஆக, இப்படி அதிகாராநுகுணம் விரோதியைப்போக்கி அபேக்ஷிததத்தைக் கொடுக்கையால் ஈஶ்வரனே ஸர்வரக்ஷகனென்னுமிடம் சொல்லிற்றாயிற்று.

---

1. ஆதி-மாநஸிகமான ஸங்கடம். 2. ஸ்ரக்—புஷ்பமாலை. அங்கராகம்- உடம்பிற் பூசிக்கொள்ளும் சந்தநம் முதலியன. 3. அடிக்கொதித்து - கேட்டை விளைக்குமென்ற அறிவு தலையெடுத்து என்றபடி. 4. பொய்ந்நின்ற ஞானம்-தேஹாத்மாபிமானம். பொல்லாவொழுக்கு - அந்தத்தேஹாத்மாபிமானவாஸனை. 5. அஸ்ப்ருஷ்டஸம்ஸாரகந்தர்-ஸம்ஸாரத்தின் ஸம்பந்தம் ஒருபோதும் இல்லாதவரென்றபடி. 6. பகவதநுபவஜநித ப்ரீதிகாரித கைங்கர்யபரர்-பகவானை அநுபவித்தலாலுண்டாகும் பிரீதியினால் செய்விக்கப்பட்ட [தூண்டப்பட்ட] கைங்கரியத்தில் மனம் ஊன்றினவர். 7. வகுத்த ஶேஷி-ப்ராப்தனான ஶேஷி. 8 விச்சேதம்-இடைவிடுகை.

* திருவிரு-க.

'இப்படி ஈஶ்வரனேயோ பின்னை எல்லாரையும் ரக்ஷிக்கிறவன்? லோகத்திலே மாதா பித்ரு ப்ரப்ருதி தேவதாந்தர பர்யந்தமாக ரக்ஷகராய்ப் போருகிறவர்கள் பலரும் இல்லையோ?' என்ன, அருளிச் செய்கிறார்

**மூ.–(௩௯) 'ஈஶ்வரனையொழிந்தவர்கள் ரக்ஷகரல்லர்' என்னுமிடம் ப்ரபந்நபரித்ராணத்திலே சொன்னோம்.**

(வ்யா.) 'ஈஶ்வரனை யொழிந்தவர்கள் ரக்ஷகரல்லரென்னுமிடம் ப்ரபந்நபரித்ராணத்திலே சொன்னோம்' என்று. அதாவது- 1.நிருபாதிக பந்துவாய், ஸர்வகாலமும் கைவிடாதே நோக்கிக்கொண்டு போரும் ஸர்வேஶ்வரனை யொழிந்த 2. ஔபாதிக பந்துக்களான மாதாபித்ராதிகளும், 3. அர்வாசீநரான தேவதாந்தரங்களும் ரக்ஷகரல்லரென்னுமிடம் ஸஹேதுகமாக ப்ரபந்நபரித்ராணமென்கிற ப்ரபந்தத்திலே சொன்னோம்; அதிலே கண்டுகொள்வதென்கை.

அநந்தரம், அர்த்தபலத்தாலே இப்பதத்தில் அநுஸந்திக்கப்படும் ஸ்ரிய:பதித்வத்தை அருளிச்செய்கிறார்

**மூ.-(௪0) ரக்ஷிக்கும்போது பிராட்டிஸந்நிதி வேண்டுகையாலே, இதிலே, ஸ்ரீஸம்பந்தமும் அநுஸந்தேயம்.**

(வ்யா.) 'ரக்ஷிக்கும்போது' என்று தொடங்கி, அதாவது- (௯௪) "லக்ஷ்ம்யா ஸஹ ஹ்ருஷீகேஶோ தேவ்யா காருண்யரூபயா। ரக்ஷகஸ்ஸர்வஸித்தாந்தே வேதாந்தேபி ச கீயதே" [லக்ஷ்ம்யாஸஹ ஹ்ருஷீகேஶோ தேவ்யாகாருண்யரூபயா - ரக்ஷகஸ்ஸர்வஸித்தாந்தே வேதாந்தேபிசகீயதே] என்கிறபடியே ரக்ஷகனான ஈஶ்வரன் சேதநரை ரக்ஷிக்குந் தசையில் இவர்களுடைய அபராதங்களைக் கண்டாதல், தன் ஸ்வாதந்த்ர்யத்தாலேயாதல் உபேக்ஷியாமற் செய்கைக்கு

1. நிருபாதிகபந்து - காரணத்தாலான பந்துத்வ மில்லாமல் ஸ்வதஸ்ஸித்தமான பந்துத்வமுள்ளவன். 2. ஔபாதிகபந்துக்கள் - காரணத்தால் பந்துவாக இருப்பவர்கள். 3. அர்வாசீநர்-பிற்பட்டவர்கள்; புதிதாய்த் தோன்றினவர்க ளென்றபடி.

உறுப்பான க்ருபையை ஜநிப்பிக்கும் புருஷகாரபூதையான பிராட்டி ஸந்நிதி அவஶ்யாபேக்ஷித மாகையாலே, ரக்ஷகனை அவனைச் சொல்லுகிற இவ்வகாரத்திலே அவனுடைய லக்ஷ்மீஸம்பந்தமும் அநுஸந்தேயமென்கை. 'லக்ஷ்மீ' என்னாதே 'ஸ்ரீ'என்றது-(சுஙி)'ஶ்ரயத' இதி ஸ்ரீ:, [ஶ்ரயத இதி ஸ்ரீ:] என்கிறபடியே அவனை நித்யஸேவை பண்ணுகையாலே அவனோடு இவளுக்கு உண்டான 1. அவிநாபாவமும், (சுசு)'ஶ்ரீயத இதி ஸ்ரீ:'[ஶ்ரீயத இதி ஸ்ரீ:] என்கிறபடியே சேதநருக்கு இவள் நித்யஸேவ்யையா யிருக்குமென்னுமதுவும் தோற்றுகைக்காக.

இன்னமும் இவ்வகாரத்தில் ஈஶ்வரனுடைய லக்ஷ்மீஸம்பந்தம் நியமேந தோற்றுமென்னுமத்தை ஆப்தவசநத்தாலே தர்ஶிப்பிக்கிறார்

**மூ.-(சுக) அத்ர பகவத்ஸேநாபதிமிஶ்ரர்வாக்யம்:- "அவன்மார்பு விட்டுப் பிரியில் இவ்வக்ஷரம் விட்டுப் பிரிவது."**

(வ்யா.) 'அத்ர' இத்யாதியால். அதாவது-இவ்விடத்திலே ஜ்ஞாநாதிகரான ஸ்ரீஸேநாபதிஜீயர் அருளிச்செய்யும் வார்த்தை '* "அகலகில்லே னிறையும்" என்று அவன் திருமார்பிலே நித்யவாஸம் பண்ணும் இவள், அம்மார்பைவிட்டுப் பிரியிலாயிற்று, அவனுக்கு ப்ரதிபாதகமான இவ்வக்ஷரத்தை விட்டுப் பிரிவதென்று' என்கை. 'என்று' என்கிற இத்தனையுங் கூட்டாதபோது, கீழோடு இவ்வாக்யம் அந்வயியாது.

இத்தால், அவன்திருமார்பில் ஸம்பந்தம் இவளுக்கு நித்யமாகையாலே அவன் தோற்றுமிடத்திலே இவளும் தோற்றுகை நிஶ்சித மாகையால், அவன்திருமார்பில் 2 அந்வயத்தோபாதி, அவனுக்கு வாசகமான அகாரத்தில் அந்வயமும் இவளுக்குநித்யமென்றதாயிற்று.

இன்னமும் 3. இவ்வர்த்தத்தை ஸ்திரீகரிக்கைக்காக ஈஶ்வரசேதநவாசகங்களான அகார மகாரங்க ளிரண்டிலும் இவளுக்கு உண்டான 4 அநவரதாந்வயத்தை ஸத்ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார்

1. அவிநாபாவம்-விட்டுப்பிரியாமலிருக்கை. 2. அந்வயத்தோபாதி-ஸம்பந்தம்போலவே. 3. இவ்வர்த்தத்தை-எம்பெருமான் தோற்றுமிடத்தில் லக்ஷ்மியும் தோன்றுவளென்ற விஷயத்தை. 4. அநவரதாந்வயம்-இடைவிடாத ஸம்பந்தம்.

* திருவாய்மொழி-சு-௧0-௧0.

**மூ.-(சஉ) பர்த்தாவினுடைய படுக்கையையும் ப்ரஜையினுடைய தொட்டிலையும் விடாதே யிருக்கும் மாதாவைப் போலே ப்ரதம 1. சரம பதங்களை விடாதே யிருக்கும் இருப்பு.**

(வ்யா.) 'பர்த்தாவினுடைய' என்று தொடங்கி. அதாவது- சேஷபூதையான தன்ஸ்வரூபத்துக்குச் சேரும்படி அவனை ரஸிப்பிக்கைக்காகப் பர்த்தாவினுடைய படுக்கையையும் விடாதே ரக்ஷகையான தன்ஸ்வரூபத்துக்கும் பேரும்படி தத்ரக்ஷணம் பண்ணுகைக்காக ப்ரஜையினுடைய தொட்டிலையும் விடாதே இருக்கும் மாதாவானவளைப்போலே, இவளும் பர்த்ருபூதனான ஈஶ்வரனுக்கு ப்ரதிபாதகமா யிருந்துள்ள ப்ரதமபதமான அகாரத்தையும், ப்ரஜாபூதரான சேதநர்க்கு ப்ரதிபாதகமாயிருந்துள்ள சரமபதமான மகாரத்தையும் தத்தத்விஷயத்தில் தனக்கு உண்டான ஸம்பந்தத்துக்கு ஈடாக ரஸிப்பிக்கை ரக்ஷிக்கையாகிற இவற்றைப்பற்ற, விடாதே யிருக்கு மிருப்பு என்கை.

கீழ்ச்சொன்ன த்ருஷ்டாந்தத்தை ஒருவிசேஷ நிஷ்டமாக்கி அருளிச்செய்கிறார்

**மூ.-(சங) ஸ்ரீநந்தகோபரையும் க்ருஷ்ணனையும் விடாத யசோதைப்பிராட்டியைப் போலே.**

(வ்யா.) 'ஸ்ரீநந்தகோபரையும் க்ருஷ்ணனையும் விடாத' என்று தொடங்கி. அதாவது - பார்யையான தன்ஸ்வரூபாநுகுணமாக ரஸிப்பிக்கைக்காக பர்த்தாவான ஸ்ரீநந்தகோபரையும் விடாதே, மாதாவான தன்ஸ்வரூபாநுகுணமாக ரக்ஷிக்கைக்காகப் புத்ரனான க்ருஷ்ணனையும் விடாதே * "அம்பரமே" என்கிற பாட்டிற் சொல்லுகிறபடியே மத்யேவர்த்திக்கும் யசோதைப்பிராட்டியைப்போலே ப்ர

---

1. 'அகாரத்தில் இவளுக்கு ஸம்பந்தமுண்டு' என்பதற்கு த்ருஷ்டாந்தம் அருளிச்செய்பவர் 'மகாரத்தில் இவளுக்கு அந்வயமுண்டு' என்பதற்கும் த்ருஷ்டாந்தம் அருளிச்செய்தது - லக்ஷ்மிக்கு ஈஶ்வரகோடியில் அந்தர்ப்பாவமே தவிரச் சேதனகோடியில் அந்தர்ப்பாவமில்லை யென்கின்ற பக்ஷத்தை நிரஸிக்கைக்காக; லக்ஷ்மி அகாரத்தில் தோன்றுவது அர்த்தபலத்தாலே யென்றும், ஶப்தஶக்தியாலே இவளைத் தெரிவிப்பது மகாரமே யென்றும் கொள்க.

* திருப்பா-கஎ.

தம சரம பத வாச்யரான ஈஶ்வர சேதனர்களிருவரையும் விடாதே இவளும் வர்த்திக்கும்படி யென்கை.

'ஈஶ்வரஶேஷத்வமாத்ர மொழியப் பிராட்டிக்கும் ஶேஷமென்னுமிடம் 1. இவ்வாசகத்தில் இன்றிக்கே யிருக்கச்செய்தேயும், இவளுக்கும் ஶேஷம் என்று நாம்கொள்ளுகிறபடி எங்ஙனே?' என்ன, அருளிச்செய்கிறார்

சூ.-(சச) 2. ஒருவனடிமைகொள்ளும்போது க்ருஹிணிக்கென்றன்றே ஆவணவோலையெழுதுவது; ஆகிலும், பணிசெய்வது க்ருஹிணிக்கிறே. அதுபோலே நாம் பிராட்டிக்கு அடிமையாயிருக்கும்படி.

(வ்யா.) 'ஒருவன்' என்று தொடங்கி. அதாவது - லோகத்திலே ஒருவன் தாஸதாஸிகள்முதலான ஓரடிமையைக் கொள்ளும்போது தனக்கென்றே எழுதிக்கொள்ளுமதொழிய, தன் க்ருஹிணிக்கென்றன்று விலையோலை யெழுதிக்கொள்வது; ஆயிருக்கச்செய்தேயும், அடிமைத்தொழில் செய்வது க்ருஹிணிக்கிறே; அதுபோலே ஈஶ்வரஶேஷம் என்னும் அளவை இவ்வகாரம் சொல்லிற்றேயாகிலும் நாம் பிராட்டிக்கு அடிமையாயிருக்கும்படி யென்கை.

கீழ்ச்சொன்ன ஹேதுக்களையெல்லாம் அநுவதித்துக்கொண்டு, ஈஶ்வரனுக்கும் பிராட்டிக்கும் ஒருகாலும் ப்ருதக்ஸ்திதியில்லாமையை அருளிச்செய்கிறார்

சூ.-(சரு) ஆக, பிரித்து நிலையில்லை.

(வ்யா.) 'ஆக, பிரித்து நிலையில்லை' என்று.

இந்த 3. ப்ருதக்ஸ்தித்யபாவத்துக்கு இரண்டுத்ருஷ்டாந்தம் அருளிச்செய்கிறார்

---

1. இவ்வாசகத்திலின்றிக்கேயிருக்க-இவ்வகாரத்தில் ஶப்தசக்தியாலே சொல்லப்படாமலிருக்க. 2 பதிக்கு ஶேஷமானவை பத்நிக்கும் ஶேஷமென்கிற ந்யாயத்தாலே, நாம் பிராட்டிக்கு அடிமையென்று இந்த அகாரத்தில் ஶாப்தமாகச் சொல்லப்படாமலிருந்தாலும் அவனுக்கு ஶேஷமென்ற மாத்திரத்திலேயே அவளுக்கும் சேஷமென்பது தன்னடையே ஸித்திக்குமென்பது கருத்து. 3. ப்ருதக்ஸ்தித்யபாவம்-ப்ருதக்-தனியே, ஸ்திதி-இருத்தல், அபாவம்-இல்லாமை; விட்டுப்பிரியாமல்எப்போதும்சேர்ந்தேயிருக்கை யென்றபடி

**மூ.-(௪௬) ப்ரபையையும் ப்ரபாவானையும், புஷ்பத்தையும் மணத்தையும் போலே.** [1]

(வ்யா.) 'ப்ரபையை' என்று தொடங்கி. அதாவது- [2]ப்ரபைக்கும் [3]ப்ரபாவானுக்கும் ப்ருதக்ஸ்திதி யில்லாதாப்போலவும் புஷ்பத்துக்கும் பரிமளத்துக்கும் ப்ருதக்ஸ்திதி இல்லாதாப்போலவுமென்கை. (௬௭) "𑌅𑌨𑌨𑍍𑌯𑌾 𑌰𑌾𑌘𑌵𑍇𑌣𑌾𑌹𑌂 𑌭𑌾𑌸𑍍𑌕𑌰𑍇𑌣 𑌪𑍍𑌰𑌭𑌾 𑌯𑌥𑌾" [அநந்யாராகவேணாஹம்பாஸ்கரேணப்ரபாயதா] (௬௮) "𑌅𑌨𑌨𑍍𑌯𑌾 𑌹𑌿 𑌮𑌯𑌾 𑌸𑍀𑌤𑌾 𑌭𑌾𑌸𑍍𑌕𑌰𑍇𑌣 𑌪𑍍𑌰𑌭𑌾 𑌯𑌥𑌾" [அநந்யா ஹிமயா ஸீதா பாஸ்கரேண ப்ரபாயதா] என்று, ப்ரபாப்ரபாவான்களைப் போலே இருவருக்கும் ப்ருதக்ஸ்திதியில்லை யென்னுமிடம், இருவர் வாக்காலும் சொல்லப்பட்டதிறே. (௬௯) "𑌪𑍍𑌰𑌸𑍂𑌨𑌂 𑌪𑍁𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑍀𑌮𑌪𑌿 𑌪𑌰𑌿𑌮𑌲𑌰𑍍𑌦𑍍𑌧𑌿𑌂 𑌜𑌿𑌗𑌦𑌿𑌷𑍋𑌃" [ப்ரஸூநம்புஷ்யந்தீமபிபரிமலர்த்திம்ஜிகதிஷோ:] என்கிறவிடத்திலே ஈச்வரனைப் புஷ்பஸ்தாநேயாகவும், பிராட்டியைப் பரிமளஸ்தாநேயாகவும் பட்டர் அருளிச்செய்கையாலே, புஷ்பபரிமளங்களுக்குப்போலே, இருவர்க்கும் ப்ருதக்ஸ்திதி இல்லை யென்னுமிடம் அர்த்தாத் ஸித்தம்.

இந்த ப்ருதக்ஸ்தித்யபாவத்தை அநுவதித்துக்கொண்டு, இச்சேர்த்தியே சேதநர்க்கு உத்தேச்யமாய்த் தலைக்கட்டினபடியை அருளிச்செய்கிறார்

**மூ.-(௪௭) ஆக, இச்சேர்த்தி உத்தேச்யமாய்விட்டது.**

(வ்யா.) 'ஆக, இச்சேர்த்தி உத்தேச்யமாய்விட்டது' என்று. 'இச்சேர்த்தி உத்தேச்யம்' என்கையாலே, இவர்களைத் தனித்தனியே விரும்புகை உத்தேச்யம் அன்று என்றபடி. இருவரையும் பிரித்து விரும்பினால், ராவணசூர்ப்பணகைகளுக்குப்போலே, அநர்த்தமே பலிக்குமத்தனை. இருவரையும் பற்றினாலிறே, ஸ்ரீவிபீஷணாழ்வானைப்போலே வாழலாவது.

இனிமேல், இதில் விபக்த்யர்த்தம் அருளிச்செய்வதாக ப்ரதமம் விபக்திதன்னை நிர்த்தேசிக்கிறார்

---

1. ப்ரபையையும் மணத்தையும் போலே, பிரித்து நிலைஇல்லையென்று கீழ்வாக்கியத்தோடு சேரும். 2. ப்ரபை - ஒளி. 3. ப்ராபாவான் - ஒளியையுடைய பொருள்.

சூ.-(சஅ) இதிலே, சதுர்த்தி 1. யேறிக்கழியும்.

(வ்யா.) 'இதிலே சதுர்த்தியேறிக் கழியும்' என்று. அதாவது இவ்வகாரத்திலே சதுர்த்தியேறி * "ஸுப்ஸாம்ஸுலுக்" [ஸுபாம்ஸுலுக்] இத்யாதி ஸூத்ரத்தாலே லுப்தமாய்ப்போமென்கை.

'விபக்த்யந்தரமெல்லாங் கிடக்க, இவ்வகாரத்தில் சதுர்த்தியேறினபடிதான் எங்ஙனே?' என்கிற ஶங்கையை அநுவதிக்கிறார்

சூ.-(சகூ) 'சதுர்த்தியேறினபடி யென்?' 2. என்னில்,-

(வ்யா.) 'சதுர்த்தியேறினபடி யென் என்னில்' என்று.

அதுக்கு உத்தரம் அருளிச்செய்கிறார்

சூ.-(ரு௦) நாராயணபதத்துக்கு ஸங்க்ரஹமாயிருக்கையாலே.

(வ்யா.) 'நாராயணபதத்துக்கு ஸங்க்ரஹமாயிருக்கையாலே' என்று. அதாவது - இவ்வகாரம், சதுர்த்யந்தமான நாராயணபதத்துக்கு ஸங்க்ரஹமாகையாலே, இதிலும் சதுர்த்தி யேறிற்றென்கை. இங்ஙன் அன்றாகில், இரண்டுக்கும் ஸங்க்ரஹவிவரணத்வம் ஸித்தியாதிறே.

'இத்தாற் சொல்லுகிற அர்த்தம்தான் ஏது?' என்ன, அருளிச்செய்கிறார்

சூ.-(ருக) இத்தால், ஈஶ்வரனுக்கு ஶேஷமென்கிறது.

(வ்யா.) 'இத்தால், ஈஶ்வரனுக்கு ஶேஷமென்கிறது' என்று. அதாவது-இதுதான் [எ௦] "தாதர்த்யே சதுர்த்தீ" [தாதர்த்யே சதுர்த்தீ] ஆகையாலே, இச்சதுர்த்தியால் ஈஶ்வரனுக்கு ஶேஷமென்னுமிடம் சொல்லுகிறதென்கை.

(எக) "ஸர்வம்பரவஶம்து:க்கம்" [ஸர்வம்பரவஶம்துக்கம்] (எஉ) "ஸேவாஶ்வவ்ருத்தி:" [ஸேவாஶ்வவ்ருத்தி:] என்கிற

---

1. ஏறிக்கழிதல்-புணர்ந்துகெடுதல். 2. முதலில் சதுர்த்தி வந்ததனால் அதன்பொருளான ஶேஷத்வமும், விபக்தி காணப்படாமையால் கழிந்ததென்பதும் பெறப்படும். விபக்தி-வேற்றுமை யுருபு.

* அஷ்டா-எ-க-௩அ.

லௌகிகந்யாயத்தைக்கொண்டு ஶேஷத்வத்தை துக்கரூபமாக நினைத்திருக்குமவர்கள் பண்ணும் ப்ரஸ்நத்தை [1] அநுவதிக்கிறார்

**மூ.-(௫௨) 'ஶேஷத்வம் துக்கரூபமாகவன்றோ நாட்டிற் காண்கிறது' என்னில்,-**

(வ்யா.) 'ஶேஷத்வம் துக்கரூபமாக வன்றோ நாட்டிற் காண்கிறது என்னில்' என்று.

அதுக்கு உத்தரம் அருளிச்செய்கிறார்

**மூ.-(௫௩) அந்த நியமம் இல்லை; உகந்த விஷயத்துக்கு ஶேஷமாயிருக்கும் இருப்பு ஸுகமாகக் காண்கையாலே.**

(வ்யா). 'அந்தநியமமில்லை' என்று தொடங்கி. அதாவது-நாடு தன்னிலே * "பணிமின்திருவருள்" இத்யாதிப்படியே 2. அபிமத விஷயத்துக்கு ஶேஷமாயிருக்கும் இருப்பு ஸுகரூபமாகக் காண்கையாலே, ஶேஷத்வமாகில் துக்கரூபமாயிருக்குமென்கிற நியமமில்லையென்கை.

'அபிமதவிஷயத்தில் ஶேஷத்வம் ஸுகமாகிறது, அவ்விஷயத்தில் குணம் அடியாக வந்ததாகையாலேயன்றோ?' என்ன, அருளிச்செய்கிறார்

**மூ. - (௫௪) அகாரத்திலே கல்யாணகுணங்களைச் சொல்லுகையாலே, இந்த ஶேஷத்வமும் குணத்தாலே வந்தது.**

(வ்யா.) 'அகாரத்திலே' என்று தொடங்கி. அதாவது-ஈஶ்வரனுடைய ரக்ஷகத்வப்ரதிபாதகமான அகாரத்திலே அந்த ரக்ஷணோபயோகியான கல்யாணகுணங்களைச் சொல்லுகையாலே, ஈஶ்வரவிஷயமான இந்த ஶேஷத்வமும் அந்த குணங்களடியாக வந்ததென்கை. ஆகையால், இதுவும் ஸுகரூபமாயிருக்கக் குறையில்லையென்று கருத்து.

---

1. அநுவதித்தல்-முன் கூறியதை மீண்டும் எடுத்துச் சொல்லுதல்.
2. அபிமதவிஷயம்-இஷ்டமான விஷயம்: பத்நீ முதலிய விஷயம்.
* திருவாய்-௪-௧-௫.

'ஆனால், 1. ஔபாதிகமான இது ஸ்வரூபமன்றோ?' என்ன, அருளிச்செய்கிறார்

**ஸூ.—(ருரு) சேஷத்வமே ஆத்மாவுக்கு ஸ்வரூபம்.**

(வ்யா.) 'சேஷத்வமே ஆத்மாவுக்கு ஸ்வரூபம்' என்று. அதாவது - உகந்தவிஷயத்தில் 2. இதன்ஸ்வரூபத்துக்கு 3.குணக்ருதத்வத்தை ஹேதுவாகச் சொல்லுகையாலே அந்த குணக்ருதத்வம் இங்கும் உண்டென்னுமிடத்துக்குச் சொன்ன இத்தனையொழிய, 4. அர்த்த ஸ்திதியை நிரூபித்தால் (எங) "ஸ்வத்வமாத்மநி ஸஞ்ஜாதம் ஸ்வாமித்வம் ப்ரஹ்மணி ஸ்திதம்" [ஸ்வத்வமாத்மநிஸஞ்ஜாதம்ஸ்வாமித்வம்ப்ரஹ்மணிஸ்திதம்] (எச) "ஆத்மதாஸ்யம் ஹரேஸ்ஸ்வாம்யம் ஸ்வபாவஞ்ச ஸதா ஸ்மர" [ஆத்மதாஸ்யம் ஹரேஸ்ஸ்வாம்யம் ஸ்வபாவஞ்சஸதாஸ்மர] (எரு) "தாஸபூதாஸ் ஸ்வதஸ் ஸர்வே ஹ்யாத்மாந: பரமாத்மந:। நாந்யதா லக்ஷணம் தேஷாம் பந்தே மோக்ஷே ததைவ ச" [தாஸபூதாஸ் ஸ்வதஸ்ஸர்வே ஹ்யாத்மாந:பாமாத்மந:- நாந்யதாலக்ஷணந்தேஷாம் பந்தேமோக்ஷே ததைவச] இத்யாதிகளிலே 5. இத்தை ஆத்மாவுக்கு ஸ்வாபாவிகமாகச்சொல்லுகையாலே, சேஷத்வமே ஆத்மாவுக்கு ஸ்வரூபம் என்கை.

'6சேஷத்வமேயென்று அவதரிப்பானேன், ஜ்ஞாநாநந்த ஸ்வரூபமான ஆத்மவஸ்துவுக்கு? 7. அல்லாதபோதும் ஸ்வரூபம் இல்லையோ?' என்ன, அருளிச்செய்கிறார்

**ஸூ.- (ருசு) சேஷத்வம் இல்லாதபோது ஸ்வரூபம் இல்லை.**

(வ்யா.) 'சேஷத்வமில்லாதபோது ஸ்வரூபமில்லை' என்று. 8. சேஷத்வமில்லாதபோது ஆத்மாபஹாரரூபமான ஸ்வாதந்த்ர்ய

---

1. ஔபாதிகம் - காரணத்தால்வந்தது. 2. இதன் - சேஷத்வத்தின். 3. குணக்ருதம் - குணங்களாலே வந்தது. 4 அர்த்த ஸ்திதி-இங்கே, ஆத்மவஸ்து இருக்கும்இருப்பு. 5 இத்தை-சேஷத்வத்தை 6 அவதரித்தல்-அவதாரணப்பொருளைக் காட்டும் ஏகாரத்தை இட்டுச் சொல்லுதல்; அவதாரணப்பொருள் - நிஶ்சயப்பொருள்; பிரிநிலைப்பொருளை உட்கொண்ட தேற்றப்பொருள். 7 அல்லாதபோது-சேஷமாகாதபோது. 8 சேஷத்வம் இல்லாதபோது-தான் பகவானுக்கு சேஷமென்கிற ஜ்ஞாநமில்லாதபோது.

புத்தி நடக்கையாலே, ஸ்வரூபம் அழிந்துவிடும் என்னுமத்தை தர்ஶிப்பிக்கிறார், மேலிரண்டு வாக்யத்தாலே:-

மூ.- (௭௭) ஆத்மாபஹாரமாவது - ஸ்வதந்த்ரமென்கிற நினைவு; ஸ்வதந்த்ரமாம்போது இல்லையாய்விடும்.

(வ்யா.) 'ஆத்மாபஹாரமாவது' என்று தொடங்கி. அதாவது-(௭௬) "யொऽந்யதாஸந்தமாத்மாநமந்யதா ப்ரதிபத்யதே । கிம் தேந ந க்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணா" [யோऽந்யதா ஸந்தமாத்மாநம்அந்யதாப்ரதிபத்யதே- கிந்தேந ந் க்ருதம்பாபம் சோரேணாத்மாபஹாரிணா] என்று ஸர்வபாபமூலமாகச் சொன்ன ஆத்மாபஹாரமாவது-தன் ஸ்வரூபம் ஸ்வதந்த்ரம் என்கிற ப்ரதிபத்தி; ஸ்வதந்த்ரம் ஆமளவில் (௭௭) "அஸந்நேவ" [அஸந்நேவ] என்கிறபடியே 1. ஸ்வரூபம் இல்லையாய்விடும் என்கை. ஆகையால், ஶேஷத்வம் இல்லாதபோது ஸ்வரூபமில்லை என்னத்தட்டில்லையென்று கருத்து.

ஆக, ப்ரக்ருத்யர்த்தமான ஈஶ்வரனுடைய காரணத்வமும், தாத்வர்த்தமான ரக்ஷகத்வமும், அர்த்தபலத்தால்வந்த ஶ்ரிய:பதித்வமும், 2. ப்ரத்யயஸித்தமான சேதனஶேஷத்வ 3. ப்ரதிஸம்பந்தியான ஶேஷித்வமும் ஆகிற அகாரார்த்தத்தை அருளிச்செய்தாராயிற்று.

அநந்தரம் மத்யமாக்ஷரமான உகாரத்துக்கு அர்த்தம் அருளிச்செய்வதாக உபக்ரமிக்கிறார்

---

1 தான் ஶேஷனென்கிற உணர்ச்சியில்லாதவன் 'அஸத்' [ஸத்தையற்றவன்] என்று சொல்லப்படுகையாலே, ஸ்வரூபமில்லையென்றது; அன்றி, 'தான் பகவானுக்கு ஶேஷபூதன்' என்கிற உண்மைஞான மில்லாதவனுக்கு 'தான் ஸ்வதந்த்ரன்' என்கிற அஜ்ஞாநமேநிலைநிற்கையால், ஜ்ஞாநமும்ஜ்ஞாந விஶேஷமான ஆநந்தமும்இல்லையாகையாலே, ஸ்வரூபமில்லை யென்றுசொன்னதாகவுமாம். 2 ப்ரத்யயம்-இங்கே, அகாரத்துக்குப்பின்னே லோபித்துள்ள சதுர்த்தீவிபக்தி. 3 ப்ரதிஸம்பந்தி-எதிர்த்தட்டானஸம்பந்தமுள்ளவன்; ஆத்மா பகவானுக்கு ஶேஷன் என்றால், 'பகவான் ஆத்மாவுக்கு ஶேஷி' என்று ஏற்படுதல் காண்க. [ஶேஷன்-அடியவன், ஶேஷி-தலைவன்.]

**மூ.- (ரு அ) 1. ஸ்தாநப்ரமாணத்தாலே உகாரம் அவதாரணார்த்தம்.**

(வ்யா.) 'ஸ்தாநப்ரமாணத்தாலே உகாரம் அவதாரணார்த்தம்' என்று. அதாவது - (எஅ) "தவைவ பூதம் தவ பவ்யமா இதம்" [தவனேவ பூதந் தது பவ்யமா இதம்] என்றும், (எகூ) "தவைவாக்நிஸ் த்வம் வாயுஸ் த்வம் ஸூர்யஸ் த்வம் சந்த்ரமா:" [தவைவாக்நிஸ்த்வாயுஸ் தஸூர்யஸ்தநுசந்த்ரமா:] என்றும் இத்யாதிகளிலே ஏவகாரஸ்தாநத்திலே உகாரத்தை ப்ரயோகிக்கக் காண்கையாலே, ஸ்தாநப்ரமாணத்தாலே உகாரம் அவதாரணத்தை அர்த்தமாக உடைத்தாயிருக்குமென்கை.

'அவதாரணத்துக்கு அர்த்தம் 2. அயோகவ்யவச்சேதமாதல் அந்யயோகவ்யவச்சேதமாதல் ஆகையாலே, இவ்வவதாரணத்தாற் சொல்லுகிறது ஏது?' என்ன, அருளிச்செய்கிறார்

**மூ.- (ருகூ) இத்தால், பிறர்க்கு சேஷம் அன்று என்கிறது.**

(வ்யா.) 'இத்தால், பிறர்க்கு சேஷமன்றென்கிறது' என்று. அதாவது - 3. அவதாரணவாசகமான இவ்வுகாரத்தால், கீழ் ஈஶ்வர சேஷமாகச் சொன்ன இவ்வாத்மவஸ்து அந்யர்க்கு சேஷமன்று

1. ஸ்தாநப்ரமாணம் - ஒருபதம் இருக்கவேண்டிய இடத்தில் வேறொரு பதம் இருந்தால், அந்தப்பதத்தின் பொருள்தான் இதுக்கும் பொருள் என்று கொள்வது; ஏவகாரம் இருக்கவேண்டிய இடங்களில் உகாரம் இருத்தலால், உகாரத்துக்கு ஏவகாரத்தின் பொருளைக் கொள்ளவேண்டியதாயிற்றென்க. 2. அயோகவ்யவச்சேதம்-சம்பந்தமில்லாமையை நிவர்த்திப்பிக்கை: ஸம்பந்தமுண்மையைத் தெரிவிக்கையென்றபடி; ஶங்க: பாண்டர ஏவ [வெண்மையே] என்றாற்போல விசேஷணத்தோடு சேர்ந்த ஏவகாரம் 'சங்கம் வெண்மையோ அன்றோ ?' என்று தோன்றும் ஐயத்தை யொழித்து வெண்மைதானென்ற எண்ணத்தை நிலைநிறுத்துதலால், அயோகவ்யவச்சேதமாம். அந்யயோகவ்யவச்சேதமாவது-வேறொன்றன் சம்பந்தமுண்மையை நிவர்த்திப்பது; பிறிதினியைபுநீக்குவது என்று தமிழராற் சொல்லப்படும்; 'பார்த்த ஏவ தநுர்தர: [அர்ச்சுனனே வில்லாளி] என்றாற்போல விசேஷ்யத்தோடு சேர்ந்த ஏவகாரம் வேறொருவரும் வில்லாளிகளல்லரென்ற கருத்தைத் தருதலால், அந்யயோகவ்யவச்சேதமாம். 3. அகாரமென்ற விசேஷ்யத்தோடு ஏவகாரார்த்தமான உகாரம் சேர்ந்திருத்தலால், இங்கும் அந்யயோகவ்யவச்சேதமே பொருளாம்.

என்னுமிடத்தைச் சொல்லுகிறதென்கை. 1. 'சதுர்த்தியாலே ஈஶ்வர ஶேஷத்வம் ப்ரதிபாதிதமாகச்செய்தே, அந்யஶேஷத்வம் ப்ரஸ்துதமாமோ?' என்னில், 'லோகத்திலே ஒருவனுக்கு ஶேஷமான க்ருஹ க்ஷேத்ரபுத்ரதாஸாதிகள், வேறேயுஞ் சிலர்க்கு ஶேஷமாயிருக்கக் காண்கையாலே, அப்படிப்பட்ட அந்யஶேஷத்வம் இந்தஸ்தலத்திலும் உண்டோ?' என்று ஒருஶங்கை உதிக்குமிறே; ஆகையாலே, தாத்ருஶமான அந்யஶேஷத்வம் இதற்கு இல்லையென்னுமிடத்தை ப்ரதிபாதிக்கிறது, உகாரம்.

அங்ஙனன்றிக்கே, இவ்வுகாரத்தாலே லக்ஷ்மீஶேஷத்வம் சொல்லுகிறது என்பாருமுண்டென்கிறார்

**மூ.- (௬௦) பெரியபிராட்டியார்க்கு ஶேஷமென்கிறதென்றுஞ் சொல்லுவர்கள்.**

(வ்யா.) 'பெரியபிராட்டியார்க்கு ஶேஷமென்கிறது என்றுஞ் சொல்லுவர்கள்' என்று. அதாவது-(அ௦) "அகாரஸ்சித்ஸ்வரூபஸ்ய விஷ்ணோர்வாசக இஷ்யதே। உகாரஸ்சித்ஸ்வரூபாயாஶ்ஶ்ரியோவாசீ ததாவிது:। மகாரஸ்து தயோர்தாஸ இதி ப்ரணவலக்ஷணம்" [அகாரஸ்சித்ஸ்வரூபஸ்ய விஷ்ணோர்வாசக இஷ்யதே - உகாரஸ்சித்ஸ்வரூபாயாஶ்ஶ்ரியோவாசீ ததாவிது: - மகாரஸ்து தயோர்தாஸ இதி ப்ரணவலக்ஷணம்] என்றும், (அக) "அகாரேணோச்யதே விஷ்ணு: ஸர்வலோகேஶ்வரோ ஹரி:- உத்த்ருதா விஷ்ணுநா லக்ஷ்மீ: உகாரேணோச்யதே ஸதா - மகாரஸ்து தயோர்தாஸ: ஸ்ரீநாராயணயோஸ்ஸதா- ஆத்மந: ஶேஷபூதஸ்ய வாசக: ஶ்ருதிசோதித:" [அகாரேணோச்யதே விஷ்ணு: ஸர்வலோகேஶ்வரோ ஹரி: - உத்த்ருதா விஷ்ணுநாலக்ஷ்மீ உகாரேணோச்யதே ஸதா - மகாரஸ்து தயோர்விப்ர ஶ்ரீநாராயணயோஸ்ஸதா - ஆத்மநஶ்ஶேஷபூதஸ்ய வாசகஶ்ஶ்ருதிசோதித:] என்றும் இத்யாதிகளாலே பகவச்சாஸ்த்ரத்திலே அகாரத்தை பகவத்வாசகமாகவும், உகாரத்தை லக்ஷ்மீவாசகமாகவும், மகார

1 'லோபித்த சதுர்த்திக்குப் பின்னே உகாரம் சேருகையாலும், அங்கே அந்யஶேஷத்வம் சொல்லப்படாமையாலும், அதை நிவர்த்திப்பிக்கவேண்டிய அவஶ்யமென்?' என்பது, ஶங்கைக்குக் கருத்து.

த்தை ததுபயஶேஷபூத ஜீவவாசகமாகவுஞ் சொல்லுகையாலே, உகாரத்தை அவதாரணவாசகமாகக் கொள்ளாதே, லக்ஷ்மீவாசகமாகக்கொண்டு, இவ்வுகாரத்தாலே பெரியபிராட்டியார்க்கு ஶேஷமென்கிறதென்றும் நிர்வஹிப்பர்களென்கை.

1. அத்தைப் பற்றவும் பூர்வயோஜனையே முக்யமென்னுமத்தை அருளிச்செய்கிறார்

மூ.-(௯௧) அதிலும், அந்யஶேஷத்வம் கழிகையே ப்ரதாநம்.

(வ்யா.) 'அதிலும் அந்யஶேஷத்வம் கழிகையே ப்ரதாநம்' என்று. அதாவது - பெரியபிராட்டியார்க்கு ஶேஷமாகையாகிற அதிலுங்காட்டில் கீழ்ச்சொன்ன பகவச்சேஷத்வத்துக்கு விரோதியான அந்யஶேஷத்வம் கழிகையே ப்ரதாநாபேக்ஷிதம் என்கை.

'அந்யஶேஷத்வம் இப்படி க்ரூரமோ?' என்ன, அதன் க்ரௌர்யத்தை ஸத்ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார்

மூ.-(௯௨) தேவர்களுக்கு ஶேஷமான புரோடாஶத்தை நாய்க்கு இடுமாபோலே, ஈஶ்வரஶேஷமான ஆத்மவஸ்துவை ஸம்ஸாரிகளுக்கு ஶேஷமாக்குகை.

(வ்யா.) 'தேவர்களுக்கு' என்று தொடங்கி. அதாவது- ஆராத்யரான இந்த்ராதி தேவர்களுக்கு போக்யதயா ஶேஷமாகக் கல்பிதமான 2. புரோடாஶத்தை தர்ஶநஸ்பர்ஶநாதிகளுக்கு அநர்

1. ஸ்ரீபாஞ்சராத்ரத்திலே உகாரத்தை லக்ஷ்மீவாசகமாகச் சொல்லியிருக்கவும், உகாரத்துக்கு அவதாரணார்த்தம் கொள்கையே முக்கியமென்னலாமோ வென்னில்,-ப்ரணவார்த்தத்தை விவரிக்கிற ஶ்ருதிதானே 'பகவத ஏவ அஹம் அஸ்மி' என்று ஏவகாரார்த்தமாக விவரிக்கையாலும், "கண்ணபுரமொன்றுடையானுக்கு அடியேனொருவர்க்குரியேனோ" என்பது முதலிய இடங்களில் ஆழ்வார்கள் உகாரார்த்தம் அந்யஶேஷத்வநிவ்ருத்தி யென்பது தோன்ற அருளிச் செய்கையாலும், உகாரத்துக்கு அவதாரணார்த்தம் கொள்ளாத பக்ஷத்தில் அவஶ்யாபேக்ஷிதமான அந்யஶேஷத்வ நிவ்ருத்திக்காக 'ஸர்வம்வாக்யம் ஸாவதாரணம்' என்கிற ந்யாயத்தினாலாவது அவஶ்யமாக அவதாரணார்த்தக ஏவகாரத்தை அத்யாஹரிக்கவேண்டியிருத்தலாலும், பதிபத்நீ ந்யாயத்தாலே லக்ஷ்மீஶேஷத்வம் தன்னடையே ஸித்தித்துவிடுமாகையாலும், ஓரான்வழியாய்ப் பூர்வாசார்யர்கள் இங்ஙனே அருளிச்செய்து வருவதனாலுமென்க. 2. புரோடாஶம்-ஹவிஸ்.

ஊறமாம்படி நிஹீநமாயிருக்கிற நாய்க்கு இடுமாபோலே இருப்ப தொன்று, 1. ப்ராப்தஶேஷியான ஈஶ்வரனுக்கு ஶேஷமான ஆத்ம வஸ்துவை ஸர்வப்ரகாரத்தாலும் 2. ஹேயரான ஸம்ஸாரிகளுக்கு ஶேஷமாக்குகை யென்கை.

'இப்படி க்ரூரமான அந்யஶேஷத்வம் கழிகையே ஆத்மாவுக்கு ப்ரதாநாபேக்ஷிதம்' என்று கீழ்ச்சொன்ன அர்த்தத்தை ஸ்திரீகரிக்கிறார்

**மூ.–(சூங) பகவச்சேஷத்வத்திலும் அந்யஶேஷத்வம் கழிகையே ப்ரதாநம்.**

(வ்யா.) 'பகவச்சேஷத்வத்திலும் அந்யஶேஷத்வம் கழிகையே ப்ரதாநம்' என்று. அதாவது - ஸ்வரூபம் ஶேஷத்வத்திலுங்காட்டில் ப்ரதாநம் என்ற 3. அளவேயன்று, பகவான் தனக்கு ஶேஷமாயிருக்குமதிலுங்காட்டில் அந்யவிஷயத்தில் ஶேஷத்வம் கழிகையே ஆத்மாவுக்கு ப்ரதாநாபேக்ஷிதமென்கை.

இதுக்கு ப்ரமாணம் காட்டுகிறார்

**மூ.–(சூச) "மறந்தும் புறந்தொழாமாந்தர்" என்கையாலே.**

(வ்யா.) 'மறந்தும் புறந்தொழா மாந்தர்' என்கையாலே' என்று. அதாவது - யமகிங்கரஸம்வாதத்தைத் திருமழிசைப்பிரான் அருளிச் செய்த * "திறம்பேன்மின்கண்டீர்" என்கிற பாட்டிலே பாகவத லக்ஷணஞ்சொல்லுகிறவளவில், 'திருவடி தன்னாமம் மறந்தும் புறந் தொழாமாந்தர்' என்று ஸ்வாமியுடைய திருநாமத்தை மறந்தார்களாகிலும் மற்றொருவிஷயத்தில் ஶேஷவ்ருத்திபண்ணாதவர்கள் என்று சொல்லுகையாலே யென்கை.

ஈஶ்வரஶேஷமான ஆத்மவஸ்துவுக்கு ஸ்வஶேஷத்வ பரஶேஷத்வங்களிரண்டும் அந்யஶேஷத்வமாகையாலே, உபயத்தையும் இவ்வுகாரம் கழிக்கிறதென்று சொல்லி நிகமிக்கிறார்

**மூ.–(சூரு) இத்தால், தனக்கும் பிறர்க்கும் உரித்தன்று என்கிறது.**

---

1. ப்ராப்தஶேஷி - வகுத்தஶேஷி. 2. ஹேயர்–நிக்ருஷ்டர்.
3. அளவு - மாத்ரம்.
* நான்முகன் திரு. கூஅ.

(வ்யா.) 'இத்தால், தனக்கும் பிறர்க்கும் உரித்தன்றென்கிறது' என்று. அதாவது-அந்யசேஷத்வநிவர்த்தகமான இவ்வுகாரத்தாலே, 1. அந்யரில் அந்யதமத்வம் அவிசிஷ்டமாகையாலே, இவ்வாத்மவஸ்து தனக்கும் உரித்தன்று, தன்னையொழிந்த ஸம்ஸாரிகளுக்கும் உரித்தன்று என்னுமிடஞ் சொல்லுகிறதென்கை.

ஆக, உகாரார்த்தத்தை அருளிச்செய்தாராயிற்று.

அநந்தரம், த்ருதீயாக்ஷரமான மகாரார்த்தத்தை அருளிச்செய்கிறார்

சூ.-(௩௩) மகாரம், இருபத்தஞ்சாம் அக்ஷரமாய் ஜ்ஞாநவாசியுமா யிருக்கையாலே, ஆத்மாவைச் சொல்லுகிறது.

(வ்யா.)'மகாரம்' என்று தொடங்கி. அதாவது-(அஉ) “[illegible]” [ஸ்பர்சாநி கவர்கேண சவர்கேணாங்க்ரியாணி ச। டவர்கேண தவர்கேண ஜ்ஞாநகந்தாதயஸ் ததா ॥ மந:பகாரேணைவோக்தம் பகாரேண த்வஹங்க்ருதி: । பகாரேணைகாரேண மஹாந்ப்ரக்ருதிருச்யதே ॥ ஆத்மாதுஸமகாரேண பஞ்சவிம்ச: ப்ரகீர்த்தித:] என்கிறபடியே, ப்ருதிவ்யாதி ப்ரக்ருத்யந்தமான இருபத்துநாலு தத்வத்துக்கும் வாசகமாயிருந்துள்ள ககாராதிபகாராந்தமான இருபத்துநாலு அக்ஷரமும்போலன்றிக்கே மகாரம் இருபத்தஞ்சாமக்ஷரமாய் 2. *“[illegible]” [மந-ஜ்ஞாநே] என்கிற தாதுவிலே யாதல், †“[illegible]” [மநு-அவபோதநே] என்கிற தாதுவிலேயாதல் நிஷ்பந்நமாகையாலே, ஜ்ஞாநவாசியுமாயிருக்கையாலே, (அரு) “[illegible]

---

1. அந்யரில் அந்யதமத்வம் அவிசிஷ்டம் - பகவானிலும் வேறுபட்டவரென்றால் அவ்வாறு வேறுபட்டிருக்கை யென்பது ஸ்வவிஷயத்திலும் ஸமாநம் [அவிசிஷ்டம்-ஸமாநம்]. 2. மந்யதே இதி ம் மநுதே இதி ம் என்றுவது மகாரத்துக்கு வ்யுத்பத்தி.

* தாது-திவாதி-ஸ்யந்விகரணி. † தாது-தநாதி-உவிகரணி.

ஸோரயம் வுருஷ:" [பஞ்சவிம்ஸோரயம்புருஷ:] (அச) வஞ விம்ஸ: ஆத்மா பவதி" [பஞ்சவிம்ஸ ஆத்மாபவதி] என்கிறபடியே 1. பஞ்சவிம்சகனும் (அரு) "விஜ்ஞாநாத்மா புருஷ:" [விஜ்ஞாநாத்மா புருஷ:] (அக) "விஜ்ஞாதாரமரே கேந விஜாநீயாத்" [விஜ்ஞாதாரமரே கேந விஜாநீயாத்] என்கிறபடியே ஜ்ஞாநஸ்வரூபனுமாய், ஜ்ஞாநகுணகனுமாயிருக்கிற ஆத்மாவைச்சொல்லுகிறதென்கை.

கீழ்ச்சொன்ன ஶேஷத்வம் 2. ஸர்வஸாதாரணமாகையாலே 3. த்ரிவிதாத்மவர்க்கத்தையும் இதிலே சொல்லவேண்டுமாகையாலே, அருளிச்செய்கிறார்

மூ.-(சுஎ) இதுதான் ஸமஷ்டிவாசகம்.

(வ்யா.) 'இதுதான் ஸமஷ்டிவாசகம்' என்று. அதாவது-இப்படி ஆத்மவாசகமான இம்மகாரந்தான் 4. ஆத்மஸமஷ்டிக்கு வாசகமென்கை.

'ஏகவசநம் ஸமஷ்டிவாசகமாமோ?' என்கிற ஶங்கையிலே அருளிச்செய்கிறார்

மூ.-(சுஅ) ஜாத்யேகவசநம்.

(வ்யா.) 'ஜாத்யேகவசநம்' என்று. அதாவது-வ்ரீஹிஸமூஹத்தைச் சொல்லுகிறவன், 'இது ஒரு நெல்' என்றால், அந்த ஏகவசநம், 5. ஜாதிபரமானாற்போலே, இதுவும் ஆத்மஜாதிபரமான ஏகவசநமென்கை.

'இம்மகாரத்தால், ஆத்மாவினுடைய 6. எவ்வாகாரஞ்சொல்லுகிறது?' என்ன, அருளிச்செய்கிறார்

மூ.- (சுக) இத்தால், ஆத்மா ஜ்ஞாதாவென்று, தேஹத்தில் வ்யாவ்ருத்தி சொல்லிற்றாயிற்று.

---

1 பஞ்சவிம்ஶகன்-இருபத்தைந்தாந் தத்துவமானவன். 2 ஸர்வஸாதாரணம்-ஸர்வாத்மஸாதாரணம். 3 த்ரிவித ஆத்மவர்க்கம்-பத்தர் முக்தர் நித்யர் என்ற மூன்று வகையான ஆத்மஸமூஹம். 4 ஆத்மஸமஷ்டி – ஆத்மஸமூஹம். 5 ஜாதிபரம்-ஜாதியைக்காட்டுங் கருத்தைக் கொண்டது. 6 ஆத்மாவுக்கு ஶேஷத்வம் ஜ்ஞாநஸ்வரூபத்வம் ஜ்ஞாநாஶ்ரயத்வம் என்ற மூன்று வகையான தன்மையுள்ளதனால் இம்மூன்றில் எந்த ஆகாரம் மகாரத்தாற் சொல்லப்படுவது என்று ஶங்கை.

(வ்யா.) 'இத்தால்' என்று தொடங்கி. அதாவது-பஞ்சவிம்ஶாக்ஷரமாய் ஜ்ஞாநவாசியுமா யிருந்துள்ள இம்மகாரத்தால், 'ஶேஷத்வாஶ்ரயமான ஆத்மா-ஜ்ஞாநாஶ்ரயபூதனானவன்' என்று, அசேதநமான 1. தேஹத்திற்காட்டில் ஆத்மாவின் 2. வ்யாவ்ருத்தி சொல்லிற்றாயிற்று என்கை.

'தேவோஹம், மநுஷ்யோஹம், ஸ்தூலோஹம், க்ருஶோஹம்' என்று 3. தேஹத்திலே அஹம்புத்தி வ்யவஹாரங்கள் நடவாநிற்க, அஹமர்த்தபூதனான ஆத்மா, தேஹத்தில் 4. வ்யாவ்ருத்தனென்றுசொல்லுகிறபடிதான் எங்ஙனே?' என்ன, அருளிச்செய்கிறார்

**ஸூ.–(எ०) தேஹத்தில் வ்யாவ்ருத்தி தத்வஶேகரத்திலே சொன்னோம்.**

(வ்யா.) 'தேஹத்தில் வ்யாவ்ருத்தி தத்வஶேகரத்திலே சொன்னோம்' என்று. அதாவது-அநேக ஹேதுக்களாலே தேஹத்தினுடைய 5. அநாத்மத்வத்தை ஸாதியாநின்றுகொண்டு, ஆத்மாவினுடைய தத்வ்யாவ்ருத்தியைத் தத்வஶேகரமாகிற ப்ரபந்தத்திலே வ்யக்தமாகச் சொன்னோம்; அதிலே கண்டுகொள்வதென்கை.

6. 'தர்மிஸ்வரூபகதநபூர்வகமாக தத்தர்மமான ஶேஷத்வத்தைச் சொல்லுகை ப்ராப்தமாயிருக்க, இப்ரணவந்தன்னிலே ப்ரதமம் ஶே

1. ஆத்மா ஜ்ஞாதா என்னுமல் ஜ்ஞாநம் என்றாலும் தேஹத்தில் வ்யாவ்ருத்தி சொல்லப்பட்டதாம்; ஆயினும், பரமபதத்தில் ஶுத்தஸத்வமான அசித்து ஸ்வயம்ப்ரகாஶமாகையாலும், ஜ்ஞாநத்வமென்பது ஸ்வயம்ப்ரகாஶத்வ ரூபமாகையாலும், அந்த அசித்தின் வ்யாவ்ருத்திக்காக 'ஜ்ஞாதா' என்ன வேண்டியதாயிற்று; ஜ்ஞாதா - தர்மபூதமான ஜ்ஞாநத்துக்கு ஆஶ்ரயன். 2 வ்யாவ்ருத்தி - வேறுபாடு. 3 தேஹத்தில் அஹம்புத்திவ்யவஹாரங்கள். 'நான் என்பதன் பொருள் இவ்வுடல்தான்' என்ற எண்ணமும், அதற்கு ஏற்ற சொல்வழக்கும். 4 வ்யாவ்ருத்தன் - வேறுபட்டவன். 5 அநாத்மத்வம்-ஆத்மாவாகாமை. 6. தர்மிஸ்வரூபகதந பூர்வகமாக - ஆத்மஸ்வரூபலக்ஷணமான ஜ்ஞாத்ருத்வத்தை முந்துறச்சொல்லி யென்றபடி. ப்ரணவத்தில் ஜீவஸ்ரூபம் முக்கியமாகையாலே, முதலில் மகாரத்தைவைத்து அதன்பிறகு எம்பெருமானுக்கு ஶேஷபூதனென்பதைத் தெரிவிப்பதாய்ச் சதுர்த்திவிபக்தி மறையப்பெற்றதான அகாரம் வைக்கப்படவேண்டாவோ? என்று தோன்றுகிற ஶங்கையை இங்கு அநுவதிக்கிறாரென்று அறிக.

ஷத்வத்தைச் சொல்லி, பின்னை ஆத்மாவைச் சொல்லுவானென்?' என்கிற ஶங்கையிலே, அப்படி சொல்லுகைக்கு ஹேதுவை அருளிச்செய்கிறார்

**மூ.-(௭௧) மணத்தையும் ஒளியையுங்கொண்டு பூவையும் ரத்நத்தையும் விரும்புமாபோலே, ஶேஷமென்று ஆத்மாவை யாதரிக்கிறது; அல்லாதபோது *"உயிரினாற் குறைவிலம்" என்கிறபடியே த்யாஜ்யம்; அது தோன்ற, ஶேஷத்வத்தைச் சொல்லிப் பின்னை ஆத்மாவைச் சொல்லுகிறது.**

(வ்யா.) 'மணத்தையும்' இத்யாதிவாக்யத்ரயத்தாலே. அதாவது-மணத்துக்கு ஆஶ்ரயமென்று பூவை விரும்புமாபோலேயும் ஒளிக்கு ஆஶ்ரயமென்று ரத்நத்தை விரும்புமாபோலேயும், ஶேஷத்வத்துக்கு ஆஶ்ரயமென்றாயிற்று, ஆத்மாவை ஆதரிக்கிறது; ஶேஷத்வ ஆஶ்ரயமல்லாதபோது, * "உயிரினாற்குறைவிலம்" என்று பகவச்சேஷத்வ ரஹிதமான ஆத்மாவால் அபேக்ஷையுடையோமல்லோம் என்கிறபடியே, த்யாஜ்யமாய்விடுமித்தனை. இப்படியிருந்துள்ள ஶேஷத்வத்தின் ஏற்றந்தோற்ற, ஶேஷத்வத்தை முந்துறச் சொல்லி, பின்னை ஆத்மாவைச் சொல்லிற்றென்கை.

பதத்ரயாத்மகமான இப்ரணவத்தாற் சொல்லித் தலைக்கட்டின அர்த்தத்தை அருளிச்செய்கிறார்

**மூ.-(௭௨) ஆக, ப்ரணவத்தால் † "கண்ணபுரமொன்றுடையானுக்கு அடியேன் ஒருவர்க்குரியேனே" என்கிறபடியே ஜீவபரஸம்பந்தஞ் சொல்லிற்று.**

(வ்யா.) 'ஆக' என்று தொடங்கி. அதாவது-கீழ்ச்சொன்ன எல்லாவற்றாலும், ப்ரணவத்தால் † "கண்ணபுரமொன்றுடையானுக்கு" என்று சதுர்த்யந்தமான அகாரார்த்தத்தையும், "அடியேன்" என்று ஶேஷத்வாஶ்ரயவாசியான மகாரத்தில் அர்த்தத்தையும், "ஒருவர்க்குரியேனே" என்று அந்யஶேஷத்வநிவர்த்தகமான உகாரார்த்தத்தையும் சொல்லாநின்றுகொண்டு ப்ரணவார்த்தத்தை அநுஸந்தித்த

---

* திரு-வா-௪-௮-௧௦ † பெ-தி-மொ-௮-௯-௩

திருமங்கையாழ்வார் ஸ்ரீஸூக்திப்படியே, ஜீவபரர்களுக்கு உண்டான ஶேஷஶேஷிபாவஸம்பந்தத்தைச் சொல்லிற்றென்கை.

இன்னமும் பொய்கையாருடைய திவ்யஸூக்தியாலே 'ஶேஷத்வ ப்ரதிஸம்பந்தி ஒருமிதுனம்' என்னுமிடந் தோற்ற, இந்தஜீவபர ஸம்பந்தத்தை அருளிச்செய்கிறார்

மூ.-(எ௩) இத்தால், * "தாமரையாள் கேள்வனொருவனையே நோக்குமுணர்வு" என்றதாயிற்று.

(வ்யா.) 'இத்தால் * "தாமரையாள் கேள்வன்" என்று தொடங்கி. அதாவது - இப்ராணவத்தால், "தாமரையாள் கேள்வன்" என்று-அகாரவாச்யனைப் ஶேஷத்வப்ரதிஸம்பந்தியான ஶ்ரிய:பதியையும், * 'ஒருவனையே நோக்கும்' என்று-சதுர்த்யுகாரங்களாற் சொல்லுகிற அநந்யார்ஹஶேஷத்வப்ராயுக்தமான ஆத்மாவினுடைய 1. ததேகபரதையையும், 'உணர்வு' என்று - அந்த ஶேஷத்வ ஆஶ்ரயமாக மகாரத்தாற் சொல்லப்பட்ட ஜ்ஞானைகநிரூபணீயனை ஆத்மாவையும் சொல்லுகிற ஸூக்தியிற்படியே, 2. ஜீவபரஸம்பந்தம் சொல்லிற்றாயிற்றென்கை.

அகாரத்தில் ப்ரத்யயார்த்த ப்ரதாநமாக ப்ரணவார்த்தத்தை யோஜித்தார் கீழ்; அதில் தாத்வர்த்தப்ரதாநமாக, ப்ரணவத்துக்கு இன்னமும் ஒருயோஜனை அருளிச்செய்கிறார்

மூ.-(எ௪) அகாரத்தாலும் மகாரத்தாலும், ரக்ஷகனையும் ரக்ஷ்யத்தையும் சொல்லிற்று; சதுர்த்தியாலும் உகாரத்தாலும், ரக்ஷணஹேதுவான ப்ராப்தியையும் பலத்தையும் சொல்லிற்று.

(வ்யா.) 'அகாரத்தாலும்' என்று தொடங்கி. அதாவது-அகாரத்தாலே ரக்ஷகனை ஈஶ்வரனைச் சொல்லிற்று; மகாரத்தாலே தத்ரக்ஷ்யமான ஆத்மவஸ்துவைச் சொல்லிற்று; சதுர்த்தியாலே ரக்ஷிக்

1. ததேகபரதை-அந்த ஶ்ரிய:பதியொருவனிடத்தில் தானே மனம் பற்றியிருக்கை. 2. ஜீவபரஸம்பந்தம் - ஜீவாத்ம பரமாத்மாக்களுக்கு ப்ரதாநமாக உள்ள ஸம்பந்தம் என்றபடி.

* முதல்-திரு-௬௭.

கைக்கு ஹேதுவான ஶேஷத்வமாகிற 1. ப்ராப்தியைச் சொல்லிற்று; இப்படி ரக்ஷிக்கிறதற்கு பலம் - இவ்வாத்மவஸ்து அத்தலைக்கு அநந்யார்ஹமாக 2. விநியோகப்படுகையாகையாலே, அவ்வநந்யார்ஹ ஶேஷத்வ வாசியான உகாரத்தாலே ரக்ஷணபலத்தைச் சொல்லிற்றென்கை.

ஆக, இம்மந்த்ரத்திற் ப்ரதமபதமான ப்ரணவார்த்தத்தை அருளிச்செய்தாராயிற்று.

இனி மேலிற்பதங்களுக்கும் அர்த்தம் அருளிச்செய்வதாக, 3. மந்த்ரஶேஷமும் 4. இதுக்கு விவரணமாயிருக்கும்படியை முந்துற அருளிச்செய்கிறார்

**மூ.-(௭௫) இனிமேல் ப்ரணவத்தை விவரிக்கிறது.**

(வ்யா.) 'இனிமேல் ப்ரணவத்தைவிவரிக்கிறது' என்று. "இவ்விடத்தில் விவரணமாகிறது - ப்ரஸ்துதமான அர்த்தத்துக்கு உபயுக்தமான அர்த்தத்தைச் சொல்லிக்கொண்டு பூர்வோக்தமான அர்த்தத்தை விஶதீகரிக்கை" என்று தீபப்ரகாஶத்திலும், (௮௭) "𑌉𑌕𑍍𑌤𑌾𑌰𑍍𑌥𑌵𑌿𑌶𑌦𑍀𑌕𑌾𑌰𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌰𑍍𑌥𑌾𑌨𑍍𑌤𑌰𑌬𑍋𑌧𑌨𑌮𑍍 । 𑌮𑌤𑌂 𑌵𑌿𑌵𑌰𑌣𑌂 𑌤𑌤𑍍𑌰 𑌮𑌹𑌿𑌤𑌾𑌨𑌾𑌂 𑌮𑌨𑍀𑌷𑌿𑌣𑌾𑌮𑍍" [உக்தார்த்த விஶதீகார யுக்தார்த்தாந்தர போதநம் । மதம் விவரணம் தத்ர மஹிதாநாம் மநீஷிணாம்] என்று ரஹஸ்யத்ரயார்த்தவிவரணக்ரமம் அருளிச்செய்த ப்ரபந்தத்திலும், விவரணலக்ஷணத்தைச் சீயர் அருளிச் செய்தாரிறே.

'விவரிக்கிறபடிதான் எங்ஙனே?' என்ன, அருளிச்செய்கிறார்

**மூ.-(௭௬) உகாரத்தை விவரிக்கிறது - நமஸ்ஸு; அகாரத்தை விவரிக்கிறது.- நாராயணபதம்; மகாரத்தை விவரிக்கிறது-சதுர்த்தி; நாரபதமென்றுஞ் சொல்லுவர்கள்.**

(வ்யா.) 'உகாரத்தை விவரிக்கிறது நமஸ்ஸு' என்று தொடங்கி. அதாவது-அந்யஶேஷத்வத்தைக் கழிக்கிற இடத்தில் அந்யரி

---

1. ப்ராப்தி-ஸம்பந்தமென்னலாம். 2. விநியோகப்படுகை-உபயோகப்படுகை.
3. மந்த்ரஶேஷம் - மந்த்ரத்தின் மிச்சமான பாகம்: நமஸ்ஸும் நாராயணபதமும். 4. இதுக்கு-ப்ரணவத்துக்கு.

லே அந்யதமனாகச் சொல்லப்பட்ட 1. தன்னை வெளியாகச்சொல்லிக் கழிக்கையாலே, உகாரத்தை விவரிக்கிறது நமஸ்ஸு; ரக்ஷகனான ஈஶ்வரனுடைய ஸ்வரூபத்தையும் ரக்ஷ்யபூதசேதநாசேதநங்களையும் ரக்ஷணோபயோகியான குணங்களையும் ரக்ஷணப்ரகாரத்தையும் விஶதமாகச் சொல்லுகையாலே, அகாரத்தை விவரிக்கிறது நாராயணபதம்; (௮௮) "நாகிஞ்சித்குர்வதஶ்ஶேஷத்வம்" [நாகிஞ்சித்குர்வதஶ்ஶேஷத்வம்] (௮௧) "ஆகிஞ்சித்கரஸ்ய ஶேஷத்வாநுபபத்தி:" [அகிஞ்சித்கரஸ்ய ஶேஷத்வாநுபபத்தி:] என்கிறபடியே 2. கிஞ்சித்காரமில்லாதபோது ஶேஷத்வஸித்தி யில்லாமையால், தத்ஸித்திக்கு உறுப்பான கிஞ்சித்காரத்தை ப்ரதிபாதிக்கிற சதுர்த்தி, ஶேஷத்வாஶ்ரயமான ஆத்மவஸ்துவைச் சொல்லுகிற மகாரத்தைவிவரிக்கிறது. மகாரவாச்யனான ஆத்மாவினுடைய நித்யத்வம், ஏகரூபத்வம், பஹுத்வம் தொடக்கமானவற்றை ப்ரதிபாதிக்கையாலே, மகாரத்தை விவரிக்கிறது நாரபதமென்றுஞ் சொல்லுவர்கள் என்கை.

'அக்ஷரக்ரமத்திலே விவரியாதே 3. வ்யுத்க்ரமமாக விவரிப்பானேன்?' என்ன, அருளிச்செய்கிறார்

**ஸூ.-(௭௭) அடைவே விவரியாதொழிகிறது, விரோதி போய் அநுபவிக்கவேண்டுகையாலே.**

(வ்யா.) 'அடைவே' என்று தொடங்கி. அடைவது-அக்ஷரக்ரமத்திலே விவரியாதொழிகிறது-அகாரவிவரணமான நாராயணபதத்தில் பகவதநுபவத்துக்கு விரோதியான அஹங்கார மமகாராதிகள் நமஸ்ஸாலே கழியுண்டுபோய்ப் பின்னை அநுபவிக்கவேண்டுகையாலே யென்கை.

இனி மத்யமபதமான நமஸ்ஸுக்கு அர்த்தம் அருளிச்செய்வதாக, அதில் 4. அவாந்தரபதபேதத்தை அருளிச்செய்கிறார்

**ஸூ.-(௭௮) நமஸ்ஸு - "ந" என்றும், "ம:" என்றும் இரண்டுபதம்.**

---

1. நமஸ்ஸு 'ம:-ந' என்று பிரிந்து 'எனக்கு உரியனல்லேன்' என்று ஸ்வஶேஷத்வத்தை வெளிப்படையாகக் கழித்தல் காண்க. 2. கிஞ்சித்காரம்-ஏதேனும் குற்றேவல் செய்கை. 3. வ்யுத்க்ரமம் - பதம் இருக்கின்ற வரிசைக்கு மாறான முறைமை. 4. அவாந்தரபதபேதம்-நமஸ்ஸினுள் உள்ள பதப் பிரிவு.

(வ்யா.) 'நமஸ்ஸு - "ந" என்றும் "ம:" என்றும் இரண்டுபதம்' என்று.

'இவ்விரண்டுபதங்களுக்கும் அர்த்தம் எது?' என்ன, அருளிச் செய்கிறார்

**மூ.-(எசு) "மஃ" என்கிற இத்தால், 'தனக்கு உரியன்' என்கிறது; "ந" என்று அத்தைத் தவிர்க்கிறது.**

(வ்யா.) 'ம: என்கிற இத்தால்' என்று தொடங்கி. அதாவது - "மஃ" என்று ஷஷ்ட்யந்தமான இம்மகாரத்தால் மகாரவாச்யனான ஆத்மாவுக்குக் 1. கீழ்ச்சொன்ன தாதர்த்யப்ரதிகோடியான ஸ்வார்த்தவம் தோற்றுகையாலே, 'தனக்கு உரியன்' என்னுமத்தைச் சொல்லுகிறது; "ந" என்று 2. நிஷேதவாசியான நஞ்ஞாலே, அத்தைக் கழிக்கிறது என்கை.

உபயபதத்தாலும் சொன்ன அர்த்தத்தைச் சேரப்பிடித்து அருளிச்செய்கிறார்

**மூ.-(அ०) ஆக "நமஃ" என்கிற இத்தால், 'தனக்கு உரியனன்று' என்கிறது.**

(வ்யா.) 'ஆக நம: என்கிற இத்தால் தனக்கு உரியன் அன்றென்கிறது' என்று. பதக்ரமத்திலே அர்த்தஞ்சொல்லாதே, வ்யுத்க்ரமமாகச் சொல்லுகிறது 3. நிஷேத்யத்தைச்சொல்லி நிஷேதிக்க வேண்டுகையாலே; 4. க்ரமத்திலே சொல்லும்போது "*வீடுமின் முற்றவும்" என்னுமாபோலே நிஷேதபூர்வகமாக நிஷேத்யத்தைச் சொல்லுகிறதென்று யோஜிக்கவேணும். அதுதானும் பரந்தபடியிலே இவர்தாமே அருளிச்செய்தார்.

'தனக்கும் பிறர்க்கும் உரித்தன்று' என்று அந்யசேஷத்வத்தை நிஷேதித்த உகாரத்தை விவரிக்கிறதாகில், பிறர்க்கு உரித்தன்றென்றத்

---

1. கீழ்ச்சொன்ன தாதர்த்யம் - அகாரத்தில் லோபித்துள்ள சதுர்த்தியின் அர்த்தமான தாதர்த்யம்; தாதர்த்யப்ரதிகோடி - ததர்த்தமாக [பகவதர்த்தமாக] இருக்கையென்பதற்கு எதிர்த்தட்டானது. 2. நிஷேதவாசி - எதிர்மறைப் பொருளைச் சொல்லுவது. 3. நிஷேத்யம் - நிஷேதிக்கப்பட வேண்டியது. 4. பதக்ரமத்திலே சொல்லியுள்ள இடத்திற்கு உபபத்தி அருளிச்செய்வது, 'க்ரமத்திலே' என்று தொடங்கும் வாக்யம்.

* திரு-வா-மொ-க-உ-க.

த்தையும் விவரியாமல், 'தனக்குரியனன்று' என்ற இத்தையே விவரிப்பானேன்? என்கிற ஶங்கையிலே அருளிச்செய்கிறார்

**மூ.-(அக) 1. பிறர்க்கு உரியனுன அன்று தன்வைலக்ஷண்யத்தைக் காட்டி மீட்கலாம்; தனக்கென்னுமன்று யோக்யதையும் கூட அழியும்.**

(வ்யா.) 'பிறர்க்கு உரியனுனவன்று' என்று தொடங்கி. அதாவது-அந்யஶேஷபூதனுன அன்று, ஶேஷத்வத்துக்கு இசைகையாலே, அந்யரிற்காட்டில் தனக்குஉண்டான ஸர்வகாரணத்வ ஸர்வரக்ஷகத்வ ஸர்வஶேஷித்வாதியான வைலக்ஷண்யத்தைக் காட்டி அந்நிலையில்நின்றும் மீட்கலாம்: 'தனக்குரியன்' என்று நிற்குமன்று (அசூ) "ஸ்வமே" [த்வம்மே] என்றால், (கூ௦) "அஹமே" [அஹம்மே] என்னுமது ஒழிய ஶேஷத்வத்துக்கு இசையாமையாலே, மீட்கைக்கு யோக்யதையுங்கூட இல்லையாய்விடு மென்கை.

'இந் நமஸ்ஸால் செய்கிற அம்ஶந்தான் எது?' என்ன, அருளிச்செய்கிறார்

**மூ.-(அ௨) இத்தால், விரோதியைக் கழிக்கிறது.**

(வ்யா.) 'இத்தால் விரோதியைக் கழிக்கிறது' என்று.

'அதுதான் ஒன்றோ? பலவோ?' என்ன, அருளிச்செய்கிறார்

**மூ.-(அ௩) விரோதிதான்-மூன்று.**

(வ்யா.) 'விரோதிதான் மூன்று' என்று.

அம்மூன்றுந்தான் எது? என்ன, அருளிச்செய்கிறார்

**மூ.-(அ௪) அதாவது - ஸ்வரூபவிரோதியும், உபாயவிரோதியும், ப்ராப்யவிரோதியும்.**

(வ்யா.) 'அதாவது-ஸ்வரூபவிரோதியும், உபாயவிரோதியும், ப்ராப்யவிரோதியும்' என்று. இத்தால் ப்ரதமபதத்திற்சொன்ன 2. ஸ்வரூ

---

1. எம்பெருமானுக்கு ஶேஷனுகைக்கு யோக்யதையை யுண்டாக்குகிற அந்யஶேஷத்வத்தைக் காட்டிலும், எம்பெருமானுக்கு அடிமைப்படுதலையும் அழிக்கிற ஸ்வஶேஷத்வம் [நான் எனக்கு உரியேன் என்பது] அதிக்ரூரமாகையாலே அத்தைக்கழிக்கிற நமஸ்ஸாலே அந்யஶேஷத்வம் தானே கழியுண்டுபோ மென்பது, இந்த மூலவாக்யத்தின் கருத்து. 2. ஸ்வரூபத்துக்கு - பகவதநந்யார்ஹஶேஷத்வ ஸ்வரூபத்துக்கு.

பத்துக்கு விரோதியும், 1. இப்பதத்தில் ஆர்த்தமாக ஸித்திக்கிற உபாயத்துக்கு விரோதியும், உத்தரபதத்திற்சொல்லுகிற ப்ராப்யத்துக்கு விரோதியும் என்கை. இந்நமஸ்ஸுதான் 2. காகாக்ஷிந்யாயத்தாலே பூர்வோத்தரபதங்களிற் சொல்லுகிற ஸ்வரூப ப்ராப்யங்களினுடைய விரோதிகளைக் கழிக்கக்கடவதாயிறே இருப்பது.

'இவ்விரோதித்ரயமும் கழிகையாவது தான் எது?' என்ன, அது தன்னை அடைவே அருளிச்செய்கிறார், மேல் மூன்று வாக்யத்தாலே.

**ஸூ.-(அரு) ஸ்வரூபவிரோதி கழிகையாவது-"*யானே நீ என்னுடைமையும் நீயே" என்றிருக்கை; உபாய விரோதி கழிகையாவது-"†களைவாய் துன்பம் களையா தொழிவாய் களைகண்மற்றிலேன்" என்றிருக்கை; ப்ராப்யவிரோதி கழிகையாவது-"மற்றை நங்காமங்கள் மாற்று" என்றிருக்கை.**

(வ்யா.) 'ஸ்வரூபவிரோதி' இத்யாதி. அதாவது - 3. ஸ்வரூபத்துக்கு விரோதி "*யானே என்தனதே" என்றிருக்கை யாகையாலே, அது கழிகையாவது "*யானே நீ யென்னுடைமையும் நீயே" என்று - 4. ஆத்ம ஆத்மீயங்கள் இரண்டும் 5. அத்தலைக்கு ப்ரகாரதயா ஶேஷம் என்றிருக்கை யென்கை. 'உபாயவிரோதி' இத்யாதி. அதாவது - 6. உபாயத்துக்கு விரோதி 7. ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயமாகையாலே, அது 8. கழிகையாவது - "†களைவாய் துன்பம் களை

1. இப்பதத்தில் ஆர்த்தமாக ஸித்திக்கிற-இப்பதத்துக்கு அர்த்தமான ஸ்வஸ்வாதந்த்ர்யநிவ்ருத்தியாகிற தின்பலத்தால் ஏற்படுகிற. 2.காகாக்ஷிந்யாயத்தாலே-காகத்துக்குக் கண்விழி ஒன்றேயிருந்ததேயாயினும் அதுதானே இரண்டு கண்களிலும் ஸஞ்சரித்துப்பார்வையையுண்டாக்குவதுபோலே,நடுவில் நிற்கும் நமஸ்ஸு தனக்குப்பூர்வபதமான ப்ரணவத்திலும் உத்தரபதமான நாராயண பதத்திலும் அந்வயிக்கையாலே என்றபடி. 3. ஸ்வரூபத்துக்கு - ஸ்வரூப ஜ்ஞாநத்துக்கு. 4. ஆத்மஆத்மீயங்கள்-தானும் தன்னுடைமையும். 5. அத்தலைக்குப்ரகாரதயா ஶேஷமென்றிருக்கை-ஈஶ்வரனுக்கு சரீரமாய்க்கொண்டு ஶேஷமென்றுகொள்ளுகை. 6. உபாயத்துக்கு - உபாயத்வாத்யவஸாயத்துக்கு.7.ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயம்-தன்னைக் காத்துக்கொள்வதில் தனக்கு ஸம்பந்த முண்டாகை. 8. மஃந-நான் எனக்கன்று [அதாவது-என்னுடைய ரக்ஷணத்தில் உரிமை யுடையவனன்று] என்று பொருள்பட்டு, பகவதேகரக்ஷகனென்ற கருத்தை விளக்குவதாகி, உபாயவிரோதியைக் கழித்தல் காண்க.

* திருவா-மொ-உ-கூ-கூ. †திருவா-மொ. ரு-அ-அ.

யாதொழிவாய் களைகண் மற்றிலேன்" என்று - 'துக்கத்தைப் போக்குவாய் போக்காதொழிவாய், வேறொரு ரக்ஷகவஸ்துவையுடையேனல்லேன்' என்றிருக்கை யென்கை. 'ப்ராப்யவிரோதி' இத்யாதி. அதாவது - 1. ப்ராப்யத்துக்கு விரோதி ஸ்வப்ரயோஜநபுத்தியாகையாலே, அது கழிகையாவது-"*மற்றைநங்காமங்கள் மாற்று" என்று- 'உன்னுகப்புக்குப் புறம்பான எங்களுடைய ஆசையைப் போக்கு' என்றிருக்கை என்கை.

இப்படி ஸ்வரூப உபாய புருஷார்த்தங்கள் மூன்றுக்கும் விரோதியாகிறது - இவனுடைய அஹங்கார மமகாரங்களாகையாலே, 2. அதனுடைய க்ரௌர்யத்தையும், தந்நிவ்ருத்தியிலுண்டான நன்மையையும் அருளிச்செய்கிறார்

**மூ. (அசா) "மஃ" என்கை-ஸ்வரூபநாஶம்; "நம:" என்கை - ஸ்வரூபோஜ்ஜீவநம்.**

(வ்யா.) 'ம: என்கை - ஸ்வரூபநாஶம், 'நம:' என்கை - ஸ்வரூபோஜ்ஜீவநம்' என்று. அதாவது-(சூக) "[illegible] ॥ [illegible]" [சேதநஸ்ய யதாமம்யம் ஸ்வஸ்மிந் ஸ்வீயேச வஸ்துநி - மம இத்யக்ஷரதவந்த்வம் ததாமம்யஸ்ய வாசகம்] என்கிறபடியே, 'ம:' என்கிற இதிலே 3. அஹங்கார மமகாரங்கள் இரண்டுமுண்டாகையாலே அதிலே அந்விதனுகை, இவ்வாத்மாவினுடைய ஸ்வரூபத்துக்கு நாஶம்; 'நம:' என்று அதில் அந்வயமற்றிருக்கை, ஸ்வரூபத்துக்கு உஜ்ஜீவநம் என்கை. (சூஉ) "[illegible] ॥ [illegible]" [த்வ்யக்ஷரஸ்துபவேந்ம்ருத்யுஸ் த்ர்யக்ஷரம் ப்ருஹ்மண: பதம் - மமேதி த்வ்யக்ஷரோ ம்ருத்யுர் நமமேதிச ஶாஶ்வதம்] என்னக்கடவதிறே.

---

1. ப்ராப்யம்-புருஷார்த்தம். 2. அதனுடைய-அகங்காரமமகாரங்களினுடைய. 3. 'உடையது' என்ற பொருளைக் காட்டுகிற மமதையிலும் அஹங்காரமமகாரங்கள் வருவது காண்க.

* திருப்பாவை-உக.

தான் அதனுடைய சரமதசையிலே சொல்லக்கடவ "தொழுஞ் சொல்" என்று நமஶ்ஶப்தத்தைச் சொல்லுகையாலே, பலம் சொல்லிற்று என்கை.

இப்பதத்திலே, ததீயஶேஷத்வமும் ஆர்த்தமாக அநுஸந்தேயமாகையாலே, அத்தை அருளிச்செய்கிறார்

**சூ.-(அகூ) "† உற்றதும் உன்னடியார்க்கடிமை" * என்கிறபடியே, இதிலே பாகவதஶேஷத்வமும் அநுஸந்தேயம்.**

(வ்யா.) 'உற்றதும்' என்று தொடங்கி. அதாவது - "† நின் திருவெட்டெழுத்துங் கற்று நானுற்றதும் உன்னடியார்க்கு அடிமை" என்று - திருமந்த்ரங்கற்றதால் நான்உற்றதும் உன்னடியார்க்கு அடிமை என்னும் இவ்வர்த்தத்திலே' என்கிறபடியே, அஹங்கார மமகாரங்கள் நிவ்ருத்தமாய்ப் பகவச்சேஷத்வம் உள்ளபடி ப்ரகாஶிக்கிற இந்நமஸ்ஸிலே, தத்காஷ்டையான பாகவதஶேஷத்வமும் அநுஸந்திக்கவேணு மென்கை.

இப்படி ஆர்த்தமாக அநுஸந்திக்கப்படும் பாகவதஶேஷத்வந்தான், இந்நமஸ்ஸிலன்றிக்கே ஸ்தலாந்தரங்களிலே சொல்லுவாருமுண்டாகையாலே, அத்தை அருளிச்செய்கிறார்

**சூ.-(கூ0) இது - அகாரத்திலே என்றுஞ் சொல்லுவர்கள்; உகாரத்திலே யென்றுஞ் சொல்லுவர்கள்.**

(வ்யா.) 'இது அகாரத்திலே என்றுஞ் சொல்லுவர்கள், உகாரத்திலே என்றுஞ் சொல்லுவர்கள்' என்று. அதாவது - சதுர்த்தியாலே ஆத்மாவினுடைய பகவச்சேஷத்வத்தைச் சொல்லுகையாலே, பகவச்சேஷத்வகாஷ்டையான இந்தப்பாகவதஶேஷத்வாநுஸந்தாநம் அகாரத்திலே யென்றும் சிலர் சொல்லுவர்கள். அநந்யார்ஹஶேஷத்வத்துக்கு எல்லை ததீயஶேஷத்வபர்யந்தமாக நிற்கையாகையாலே, அநந்யார்ஹத்வப்ரதிபாதகமான உகாரத்திலே யென்றும் சிலர் சொல்லுவர்களென்கை 1. ஆர்த்தமாகையாலே, அவ்வவஸ்தலங்களிலும் சொல்லலாயிருந்ததேயாகிலும், 2. கந்தல்கழிந்தவிடத்திலே சொல்லுகையே உசிதம் என்று கருத்து.

---

† பெரிய தி-மொ-அ-க0-ரு * என்கையாலே என்று சில ஸ்ரீகோசங்கள்.
1. ஆர்த்தமாகையாலே-ஆர்த்தபலத்தாலே சொன்னதாகையாலே.
2. கந்தல்-அஹங்கார மமகாரங்கள்.

இந்நமஸ்ஸுக்குப் பூர்வத்திற் பிறந்த ப்ரதிபத்தியைப் பற்ற இதிற் பிறந்த ப்ரதிபத்திக்கு உண்டான வாசியை அருளிச்செய்கிறார்

**சூ.-(௬௧) ஈஸ்வரன் தனக்கேயாயிருக்கும்; அசித்துப் பிறர்க்கேயாயிருக்கும்; ஆத்மா தனக்கும் பிறர்க்கும் பொதுவாயிருக்கும் என்று முற்பட்ட நினைவு; அங்ஙனன்றிக்கே, அசித்தைப்போலே * தனக்கேயாக எனைக் கொள்ளவேணுமென்கிறது நமஸ்ஸால்.**

(வ்யா.) 'ஈஸ்வரன் தனக்கேயாயிருக்கும்' என்று தொடங்கி. அதாவது ரு-(௬௩) "ஸ்வரூபம் ஸ்வாதந்த்ர்யம் பகவத:" [ஸ்வரூபம் ஸ்வாதந்த்ர்யம் பகவத:] என்கிறபடியே, ஸ்வாதந்த்ர்யமே ஸ்வரூபமான ஈஸ்வரன், ஸ்வார்த்தனாயே இருக்கும்; சைதந்யரஹிதமாகையாலே தனக்கென்னலாக்கு யோக்யதையின்றிக்கே பாரதந்த்ர்யைகரூபமாயிருக்கும் அசித்து, பரார்த்தமாயே இருக்கும். சதுர்த்தியிற் சொன்ன சேஷத்வத்தையும் மகாரத்திற் சொன்ன ஜ்ஞாத்ருத்வத்தையும் உடையவனான ஆத்மா 1. ஜ்ஞாத்ருத்வபலத்தாலே ஸ்வார்த்ததைக்கும், சேஷத்வத்தாலே பாரார்த்தத்தைக்கும் பொதுவாயிருக்கும் என்று, 2. நமஸ்ஸுக்குப் பூர்வபதத்திற் பிறந்த ப்ரதிபத்தி, அப்படியன்றிக்கே, 3. பாரார்த்த்யைகவேஷமான அசித்துப்போலே * "தனக்கேயாக வெனைக்கொள்ளுமீதே" என்கிறபடியே 4. அதந்தனக்கே 5. ரஸமாம்படி விநியோகங்கொள்ளவேணும் என்று அபேக்ஷிக்கிறது இந்நமஸ்ஸாலே என்கை.

"தனக்கேயாக" என்றதை உபபாதிக்கிறார்

**சூ.-(௬௨) அதாவது - போகதசையில் ஈஸ்வரன் அழிக்கும்போது நோக்கவேணுமென்று அழியாதொழிகை.**

1. ஜ்ஞாத்ருத்வபலத்தாலே - ஜ்ஞாநத்துக்கு ஆச்ரயமாக இருப்பனென்ற ப்ரபலஹேதுவினாலே. 2. நமஸ்ஸுக்குப் பூர்வபதம் - ப்ரணவம். 3. பாரார்த்த்யைகவேஷம் - அன்னியர் பொருட்டாக இருத்தலையே ஸ்வரூபமுடைய. 4. அதந்தனக்கே - அவ்விடத்துக்கே: ஈஸ்வரனுடைய தனக்கே என்றபடி. 5. ரஸம் ஆம்படி - ஆநந்தமாம்படி.

* திருவா - ௨-௯-௪.

(வ்யா.) 'அதாவது' என்று தொடங்கி. இத்தால் அத்தலைக்கே ரஸமாம்படி விநியோகப்படுகையாவது-தன்னோடே கலந்து பரிமாறுந் தசையில் போக்தாவான ஈஶ்வரன்† "ஆட்கொள்வானொத்து என்னுயிருண்டமாயன்" என்கிறபடியே, அடிமை கொள்வாரைப்போலே புகுந்து தன் வ்யாமோஹததாலே 1. தாழநின்று பரிமாறி இத்தலையில் ஶேஷத்வத்தை அழிக்கும்போது 'நம்ஶேஷத்வத்தை நாம் நோக்கவேணும்' என்று 2. நைச்யம் பாவித்து 3. இறாய்த்து 4. அவன் போகத்தை அழியா தொழிகை யென்கை.

'இப்படி இவன் அழிக்கைக்கு ஹேது என்?' என்ன, அருளிச்செய்கிறார்

**மூ.-(சகூ) அழிக்கைக்கு ஹேது-கீழே சொல்லிற்று; மேலுஞ் சொல்லும்.**

(வ்யா.) 'அழிக்கைக்கு ஹேது' என்று தொடங்கி. அதாவது, ஈஶ்வரன் மேல்விழுந்து 5. விநியோகங்கொள்ளுகிற தசையிலே இவன் நைச்யம்பாவித்து இறாய்த்து அவன் போகத்தை அழிக்கைக்கு ஹேது-'ஶேஷத்வமே ஆத்மாவுக்கு ஸ்வரூபம்' என்கையாலே கீழே 6. ப்ரணவததிலே சொல்லிற்று; சதுர்த்தியிலே கிங்கரஸ்வபாவனாகச் சொல்லுகையாலே, மேலிற் பதத்திலும் சொல்லு மென்கை.

---

1. தாழநின்று பரிமாறி இத்தலையில் ஶேஷத்வத்தை அழிக்கும்போது-ஈஶ்வரன் தன்னைச் சேர்ந்த சேதநனைத் தனக்கு ஶேஷிபோல வைத்துத் தான் ஶேஷமாக நின்று அநுபவித்து, இவன்பண்ணும் கைங்கர்யத்தைத் தடுத்துத் தான் இந்தச் சேதநன் விஷயத்தில் ஶேஷவ்ருத்தியைச் செய்து அதை ஏற்றுக்கொள்ளும்படி செய்கின்ற ஸமயத்தில். 2. நைச்யம்-நீசத்தன்மை; தாழ்மை. "நம்ஶேஷத்வத்தை நாம் பாதுகாத்துக்கொள்ளவேணும்" என்று தன்னுடைய நைச்யத்தை அநுஸந்தத்தால் அப்போது ஸ்வரூபத்தில் மமகாரமும் ஸ்வரக்ஷணவிஷயத்தில் ஸ்வ ப்ரயத்நமு மென்றவை ஶேஷத்வத்துக்கு மாறாகத் தோன்றுகையாலே 'நைச்யத்தை பாவித்து' என்றது. 3. இறாய்த்து-பின்வாங்கி. 4. அவன்போகத்தை-அவனுடைய ப்ரீதி விகாஸத்தை. 5. விநியோகங் கொள்ளுதல் - உபயோகித்துக் கொள்ளுதல். 6. ப்ரணவத்தில் தாதர்த்யமும் நாராயணபதத்திலுள்ள சதுர்த்தியில் தாதர்த்யத்துக்கு ஏற்ற கைங்கர்யமும் ப்ரதிபாதிக்கப்பட்டாலும், மகாரத்தால் ஆத்மாவுக்கு ஏற்பட்டுள்ள ஜ்ஞாத்ருத்வத்தாலே 'நம் ஶேஷத்வத்தை நாம் நோக்கிக்கொள்ளவேணும்' என்கிற ஸ்வஸ்வாதந்த்ர்ய நினைவைப் போக்கமாட்டா தென்க.

† திருவா-சு-கூ-எ.

என்று க்ஷயமில்லாத நித்யவஸ்துவைக் காட்டி, ஸமூஹார்த்தத்திலே 'அண்' ப்ரத்யயமும் ஆதிவ்ருத்தியுமாய் "நார" என்று - நித்யவஸ்து ஸமூஹத்தைச் சொல்லி, "நாராঃ" என்று பஹுவசநமாகையாலே ஸமூஹபாஹுள்யத்தையும் சொல்லுகையால், 'நித்யவஸ்துக்களி னுடையதிரள்' என்கிறார். இதில் 'நித்ய' என்கையாலே நகாரப்ரக்ருத்யர்த்தமும், 'வஸ்துக்கள்' என்கையாலே ரகாரப்ரக்ருத்யர்த்தமும், அவற்றினுடைய 'திரள்' என்கையாலே பஹுவசநார்த்தமும் சொல்லப்பட்டதிறே.

1. 'நாரசப்தங்களானவை தாம் எவை? என்ன, அநுபாஷிக்கிறார்

மூ.-(கஎ) அவையாவன - ஜ்ஞாநாநந்தாமலத்வாதிகளும், ஜ்ஞாநசக்த்யாதிகளும், வாத்ஸல்ய ஸௌசீல்யாதிகளும், திருமேனியும், காந்தி ஸௌகுமார்யாதிகளும், திவ்யபூஷணங்களும், திவ்யாயுதங்களும், பெரிய பிராட்டியார் தொடக்கமான நாச்சிமார்களும், நித்ய ஸூரிகளும், சத்ரசாமராதிகளும், திருவாசல் காக்கும் முதலிகளும், கணாதிபரும், முக்தரும், பரமாகாசமும், ப்ரக்ருதியும், பத்தாத்மாக்களும், காலமும், மஹதாதி விகாரங்களும், அண்டங்களும், அண்டத்துக்கு உட்பட்ட தேவாதிபதார்த்தங்களும்.

(வ்யா.) 'அவையாவன' என்று தொடங்கி. ஜ்ஞாநாநந்தாமலத்வாதிகள் ஆவன- 2 ஸ்வரூபநிரூபக தர்மங்கள். 'ஆதி' சப்தத்தாலே, அநந்தத்வத்தைச் சொல்லுகிறது. 'ஜ்ஞாநசக்த்யாதிகள்' ஆவன- 3. நிரூபித

1. நாரசப்தங்கள்—அப்படிப்பட்டவைகள், நித்யவஸ்துக்களின் திரளெனப்பட்டவை. 2. ஸ்வரூபநிரூபகதர்மங்கள்—ஸ்வரூபம் இன்னபடியானது என்று நிரூபித்துக் காட்டுதற்கு அவசியமான தர்மங்கள்; 'பகவத்ஸ்வரூபம் எப்படி உள்ளது? என்றால் ஜ்ஞாநமாயும் ஆநந்தமாயும் அமலமாயும் உள்ளது என்ன வேண்டியதாதல் காண்க. 3. நிரூபித ஸ்வரூப விசேஷணங்கள்-இப்படி நிரூபிக்கப்பட்ட ஸ்வரூபத்தைச் சார்ந்துள்ள குணங்கள்; ஸமஸ்தகல்யாணகுணங்களும் ஸ்வரூபத்துக்கு விசேஷணங்களாகும்.

விநாஶ [1] அத்யந்தாபாவம். ப்ரவாஹரூபேண நித்யத்வமாவது — [2] உத்பத்திவிநாஶயோகியாகாநிற்கச்செய்தேயும், [3] பூர்வகாலத்தி லுண்டான நாமரூபலிங்காதிகளுடைய [4] அநந்யதாபாவம்.

இதில் 'மஹதாதி விகாரங்கள்' ஆவன - மஹத்தத்த்வம் தொடங்கி ப்ருதிவியளவாக உண்டான இருபத்துமூன்று தத்த்வமும். 'அண்டங்கள்' ஆவன - இம்மஹதாதிகளாலே [5] ஆரப்தங்களாய் (௬௭), "𑌅𑌣𑍍𑌡𑌾𑌨𑌾𑌂 𑌤𑍁 𑌸𑌹𑌸𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 𑌸𑌹𑌸𑍍𑌰𑌾𑌣𑍍𑌯𑌯𑍁𑌤𑌾𑌨𑌿 𑌚". [அண்டாநாந்து ஸஹஸ்ராணாம் ஸஹஸ்ராண்யயுதாநி ச] என்கிறபடியே, அஸங்க்யேயமாயிருக்கிற அண்டவிஶேஷங்கள். 'அண்டத்துக்கு உட்பட்ட தேவாதிபதார்த்தங்கள்' ஆவன - அண்டாந்தர்வர்த்திகளான தேவ மநுஷ்ய திர்யக் ஸ்தாவரங்கள்.

ஆக, காரணபதார்த்தம் அருளிச்செய்ததாயிற்று.

மேல், அயநபதார்த்தத்தை அருளிச்செய்கிறார்

ஸூ. (௬௮) அயந மென்றது - இவற்றுக்கு ஆஶ்ரய மென்றபடி.

(வ்யா.) 'அயநமென்றது-இவற்றுக்கு ஆஶ்ரய மென்றபடி' என்று; அதாவது-அயநஶப்தம் ஆஶ்ரயவாசியாகையாலே, இவற்றுக்கு அயநமென்றது இவற்றுக்கு ஆஶ்ரய மென்றபடி யென்கை.

பஹுவ்ரீஹி ஸமாஸார்த்தத்தை அருளிச்செய்கிறார்

ஸூ.—(௬௯) அங்ஙனன்றிக்கே, இவைதன்னை ஆஶ்ரயமாகவுடையவனென்னவுமாம்.

(வ்யா.) 'அங்ஙனன்றிக்கே, இவைதன்னை ஆஶ்ரயமாக வுடையனென்னவுமாம்' என்று. அதாவது - இவற்றுக்கு ஆஶ்ரயமென்று, தத்புருஷனாகச் சொல்லுகையன்றிக்கே, 'இவைதன்னை ஆஶ்ரயமாக வுடையன்' என்று பஹுவ்ரீஹியாகச் சொல்லவுமா மென்கை.

---

1. அத்யந்த அபாவம் - அடியோடில்லாமை. 2. உத்பத்தி விநாஶயோகி- உத்பத்தியையும் விநாஶத்தையும் கொண்டது. 3. பூர்வகாலத்தில் - ப்ரதம ஸ்ருஷ்டியில். 4. அநந்யதாபாவம் - வேறுவிதமாக ஆகாமலிருக்கை; முன்போலே யிருக்கை யென்றபடி. 5. ஆரப்தங்கள்-ஆனவை.

1. 'இவற்றுக்கு ஆஸ்ரயம்' என்கிறவிடத்தில் குணங்களையும் சொல்லிற்றே யாகிலும், 'இவைதன்னை ஆஸ்ரயமாகவுடையன்' என்கிற இடத்தில், குணங்களை யொழியச் சொல்லவேணும்: அக்குணங்களுக்கு [2] வ்யாப்யத்வம் சொல்லுமளவில், [3] ஆத்மாஸ்ரயமும் [4] அநவஸ்தையுமாகிற தோஷங்கள் வருமாகையாலே. "தன்குணங்களிலே ஈஸ்வரன் வ்யாபிக்கும்போது குணவிசிஷ்டனாயே வ்யாபிக்கவேணும்; நிர்க்குணமாய் வஸ்து இராமையாலே; அப்போது, வ்யாப்யகுணங்களே வ்யாபககுணங்களாய் வ்யாபககுணங்களே வ்யாப்யகுணங்களாயிருக்கையாலே, ஆத்மாஸ்ரயதோஷமுண்டாம்; அதுக்குமேலே, தன்குணங்களிலே குணி வ்யாபிக்க வென்று புக்கால், ததாஸ்ரயமான குணங்களையும் குணி வ்யாபிக்கவேணும்; அத்தவ்யாபகருடைய குணங்களையும், குணி வ்யாபிக்கவேணும். ஆகையாலே, அநவஸ்தா துஸ்ஸ்தமாம்" என்று இதுதன்னை ஸ்பஷ்டமாக ஆச்சான்பிள்ளை அருளிச்செய்தாரிறே.

இவ்வுபயஸமாஸத்தாலும் [5] பலிதாம்சத்தை அருளிச்செய்கிறார்

**மூ.-(௧௦௦) இவையிரண்டாலும் பலித்தது - பரத்வ ஸௌலப்யங்கள்.**

---

1. நாராயணன் என்பதற்கு - நாரங்களுக்கு ஆஸ்ரயம் என்ற தத்புருஷஸமாஸத்தில், நாரபதார்த்தமாக ஜ்ஞானபலைஸ்வர்யம் முதலிய எம்பெருமானுடைய குணங்கள் வந்ததுபோல, நாரங்களை ஆஸ்ரயமாகவுடையவன் [அதாவது - நாரங்களுள் வ்யாபித்திருப்பவன்] என்ற பஹுவ்ரீஹிஸமாஸத்தில், நாரபதார்த்தமாக எம்பெருமானுடைய குணங்களைத் தவிர்த்து மற்றவற்றையே கொள்ளவேணும்; அப்படிக்கொள்ளாவிட்டால் ஆத்மாஸ்ரயதோஷமும் அநவஸ்தாதோஷமும் வருமென்றபடி. 2. வ்யாப்யத்வம் - ஆஸ்ரயமாக இருக்கை. 3. ஆத்மாஸ்ரயம்-தன்னுள் தானிருக்கை. குணவிசிஷ்டனான எம்பெருமான் குணத்துக்குள் வ்யாபித்தானென்றால், குணத்துக்குள் குணம் வ்யாபித்ததாக ஏற்படுதலால், ஆத்மாஸ்ரயம். 4. அநவஸ்தை-எல்லையின்மை; குணத்துக்குள் குணம் வ்யாபிப்பதை ஒத்துக்கொண்டால், வ்யாபித்த குணத்துக்குள்ளும் வேறொருகுணமும் அதற்குள் மற்றொன்றும் என்று இவ்வாறு வரும் ஆதலால், ஒருமுடிவு ஏற்படாதென்றபடி. 5. பலிதாம்சம் - நிஷ்க்ருஷ்டமாக ஏற்பட்ட விஷயம்.

(வ்யா.) 'ஆய என்கிற இத்தால்' என்று தொடங்கி. அதாவது- 'ஆய' என்கிற இந்தச் சதுர்த்தியாலே * "சென்றால் குடையாம்" என்கிற பாட்டிற் சொல்லுகிறபடியே திருவனந்தாழ்வானைப் போலே ஸர்வவிதகைங்கர்யங்களும் செய்யவேணுமென்று அபேக்ஷிக்கிறது என்கை.

'நமஸ்ஸாலே தனக்கென்ன ஒன்றை விரும்புகைக்கு ப்ராப்தியில்லாத அத்யந்தபாரதந்த்ர்யம் சொல்லியிருக்க' இக்கைங்கர்யத்தைத் தான் விரும்பி அபேக்ஷிக்கை ஸம்பவியாதுஎன்று இருக்குமவர்கள் பண்ணும் ப்ரஶ்நத்தை அநுவதிக்கிறார்

ஸூ.-(௧௰௬) 'நமஸ்ஸாலே தன்னோடு உறவில்லை யென்று வைத்துக் கைங்கர்யத்தை ப்ரார்த்திக்கக் கூடுமோ?' என்னில்,—

(வ்யா.) 'நமஸ்ஸாலே தன்னோடு உறவில்லையென்று வைத்துக் கைங்கர்யத்தை ப்ரார்த்திக்கக் கூடுமோவென்னில்' 1 என்று.

அதுக்கு உத்தரம் அருளிச்செய்கிறார்

ஸூ.-(௧௰௭) † "படியாய்க் கிடந்து உன்பவளவாய் காண்பேனே" என்கிறபடியே கைங்கர்யப்ரார்த்தனை வந்தேறி அன்று; ஸ்வரூபப்ரயுக்தம்.

(வ்யா.) † 'படியாய்க்கிடந்து' என்று தொடங்கி. 2 அதாவது - † "படியாய்க்கிடந்து உன்பவளவாய்காண்பேனே" என்று, அத்யந்த பாரதந்த்ர்யத்தோடே கைங்கர்யப்ரார்த்தனையையும் சொல்லுகிறபடி.

1. நமஶ் ஶப்தம்-நாராயணாய என்பதோடு சேர்ந்து, மகாரத்திற்சொன்ன ஜ்ஞாத்ருத்வத்தால கைங்கர்யத்திலும் வரும் மமகாரத்தை விலக்குமென்று நமஶ் ஶப்தார்த்தப்ரகரணத்திற் சொல்லிவிட்டு, இங்கே, கைங்கர்யப்ரார்த்தனையைச் சதுர்த்தி காட்டுமென்பது பொருந்துமோ? என்று ஶங்கைக்குக் கருத்து. 2. கீழ்த்தோன்றிய ஸந்தேஹத்துக்கு உத்தரம்:— இங்கே சொல்லுகிற கைங்கர்ய ப்ரார்த்தனை-ஸ்வப்ரயோஜநத்தைச் சிறிதும் உத்தேசித்து வாராமல் ஸ்வஶேஷியின் முகவிகாஸத்தையே உத்தேசித்ததாய், அசித்வ்யாவ்ருத்தரூபமான ஸ்வ சைதந்யத்துக்கு ஏற்றதாய் ஸ்வதஃ இருப்பதொன்றாகையாலே யுக்தமென்றபடி.

* முதல் திருவ - ௫௩. † பெருமாள் திரு ௪-௯.

யே, கைங்கர்ய ப்ரார்த்தனை - ஸ்வபோக்த்ருத்வரூப அஹங்காரப்ரயுக்தமாய்க்கொண்டு வருமேதேறியானது அன்று, சேஷிக்கு அதிசயத்தை விளைக்கல்லது தான் தரியாதபடியான தன் ஸ்வரூபத்தைப் பற்றி வந்ததென்கை.

உக்தத்தை ஹேதுவாகக்கொண்டு சதுர்த்தியின் கைங்கர்ய ப்ரார்த்தநாப்ரகாசகத்வத்தை அருளிச்செய்கிறார்

சூ. (௱௦அ) ஆகையால், * "வழுவிலா வடிமை செய்ய வேண்டும் நாம்" என்கிற ப்ரார்த்தனையைக் காட்டுகிறது.

(வ்யா.) 'ஆகையால்' என்று தொடங்கி. அதாவது - கைங்கர்ய ப்ரார்த்தனை வருமேதேறியன்றிக்கே, ஸ்வரூபப்ரயுக்தமாகையாலே, * "வழுவிலாவடிமைசெய்யவேண்டுநாம்" என்று, 'அடிமையில் ஒன்றும் நழுவாதபடி ஸகலகைங்கர்யங்களும் செய்யவேண்டும் நாம்' என்கிற ப்ரார்த்தனையை, இச்சதுர்த்தி ப்ரகாசிப்பிக்கிறதென்கை.

இனி, இந்தக்கைங்கர்யப்ரார்த்தனை இடைவிடாமல்நடக்கைக்கு உறுப்பான ப்ராப்யருசியுடையார்படியை அருளிச்செய்கிறார்

சூ.-(௱௦௯) "† கண்ணாரக்கண்டு கழிவதோர்காதலுற்றார்க்குமுண்டோ கண்கள் துஞ்சுதல்" என்கிறபடியே காண்பதற்கு முன்பு உறக்கமில்லை; கண்டால் "ஸதா பச்யந்தி" ஆகையாலே உறக்கமில்லை.

(வ்யா.) 'கண்ணாரக்கண்டு' என்று தொடங்கி. அதாவது - "† இமையோர்கள் குழாம், தொழுவதும்சூழ்வதும்செய் தொல்லை மாலைக் கண்ணாரக்கண்டு, கழிவதோர் காதலுற்றார்க்குமுண்டோ கண்கள் துஞ்சுதல்" என்று 'நித்யஸூரிகளுடைய திரளானது நிரந்தரம் அநுபவம் பண்ணுகிற ஸர்வேச்வரனைக் கண்கள் நிறையும்படி [1] கண்டொழியக் கழியாதபடியான காதலிலே நிலைநின்றவர்களுக்கும் கண்கள் உறங்குதலுண்டோ?' என்னுமாபோலே, விஷயத்தைக் காண்பதற்குமுன்பு ஜ்ஞாநஸங்கோசரூபமான உறக்கமில்லை; கண்ட

1. கண்டொழியக் கழியாத-கண்டாலல்லது நீங்காத.

* திருவாய்மொ. ௩-௩-௧.     † திருவிரு-௯௭.

**மூ-(ககஉ) இவ்வடிமைதான் "*ஒழிவில்காலமெல்லா முடனாய்மன்னி" என்கிறபடியே ஸர்வதேஶ ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் அநுவர்த்திக்கும்.**

(வ்யா.) 'இவ்வடிமைதான்' என்று தொடங்கி. அதாவது-இவ்வாத்மாவினுடைய ஸ்வரூபாநுரூபபுருஷார்த்தமான இந்தக் கைங்கர்யந்தான் * "ஒழிவில்காலமெல்லா முடனாய்மன்னி" என்று—'ஒழிவில்லாத காலமெல்லாம் ஸர்வதேஶத்திலும் உடனாய் ஸர்வாவஸ்தையிலும் பிரியாதநின்று' என்கிறபடியே ஸர்வதேஶத்திலும் ஸர்வகாலத்திலும் ஸர்வாவஸ்தையிலும் நடந்துசெல்லும் என்கை.

பார்யைக்கு மங்களஸூத்ரதாரணம் பர்த்தாவுக்கு அநந்யார்ஹை யென்று காட்டுமாபோலே, திருமந்த்ரதாரணம் சேதநர்க்கு பகவதநந்யார்ஹத்வப்ரகாஶகம் என்னுமிடந் தோற்ற, இத்தை ஒரு மங்களஸூத்ரமாக நிரூபித்து அருளிச்செய்கிறார்

**மூ.-(ககங) எட்டிழையாய் மூன்றுசரடா யிருப்பதொரு மங்களஸூத்ரம்போலே திருமந்த்ரம்.**

(வ்யா.) 'எட்டிழையாய்' என்று தொடங்கி. அதாவது—பதினாறிழையாய் இரண்டுசரடா யிருக்கும் லௌகிகமான மங்களஸூத்ரம் போலன்றிக்கே, எட்டிழையாய் மூன்றுசரடாயிருப்பதொரு மங்களஸூத்ரம்போலே, எட்டுத்திருவக்ஷரமாய் மூன்றுபதமா யிருக்கிற இத்திருமந்த்ரமென்கை.

'இப்படி நிரூபித்துச்சொன்ன இத்தால் எவ்வர்த்தம் சொல்லுகிறது?' என்ன, அருளிச்செய்கிறார்

**மூ.-(ககச) இத்தால், ஈஶ்வரன் ஆத்மாக்களுக்குப் பதியாய்நின்று ரக்ஷிக்கும் என்கிறது.**

(வ்யா.) 'இத்தால்' என்று தொடங்கி. அதாவது-இத்தை மங்களஸூத்ரமாகச் சொன்ன இத்தால், ஈஶ்வரன் [1] இத்தோடு அந்வயமுடைய ஆத்மாக்களுக்குப் பதியாய் நின்றுகொண்டு ரக்ஷிக்குமென்று சொல்லுகிறதென்கை.

---

1. இத்தோடு - அந்வயமுடைய இந்தத்திருமந்த்ரத்தோடு ஆசார்யோபதேசமுகத்தாலே சம்பந்த முடைய.

* திருவாய்மொ - ங-ங-க.

# முமுக்ஷுப்படி

## த்வயப்ரகரணம்

### வ்யாக்யாந அவதாரிகை.

---

ப்ரதமரஹஸ்யமான திருமந்த்ரத்தினுடைய அர்த்தத்தை அருளிச்செய்த அநந்தரம், அதில் மத்யமபதத்தாலும் த்ருதீய பதத்தாலும் ப்ரதிபாதிக்கப்பட்ட உபாயோபேயங்களை 1. விசதமாக ப்ரதிபாதியாநின்றுள்ள த்வயத்தினுடைய அர்த்தத்தை அருளிச்செய்கிறார்.

'முன்பு அருளிச்செய்த 2. மூன்றுப்ரபந்தங்களிலும் 3. திருமந்த்ராநந்தரம் சரமஶ்லோகத்தை அருளிச்செய்து பின்பு த்வயத்தை அருளிச்செய்தவர், இப்போது த்வயத்தை முந்துற அருளிச்செய்வான் என்?' என்னில்,—இரண்டு ப்ரகாரமும் அருளிச்செய்யலா யிருக்கையாலே. ஆச்சான்பிள்ளை 4. சீயர் முதலானோரும், இந்தப்ரகாரமே அருளிச்செய்தது.

'இவ்விரண்டு ப்ரகாரந்தனக்கும் கருத்து என்?'—என்னில், சரமஶ்லோகம் முன்னாக த்வயத்தைச்சொல்லுகிறது 5 விதாநுஷ்டாந ரூபங்களாயிருக்கையாலே விதி முன்னாக அநுஷ்டாநத்தைச் சொல்லுகை ப்ராப்தமாயிருக்கையாலும், 6. திருமந்த்ரம் ப்ராப்யபரமாய் சரமஶ்லோகம் ப்ராபகபரமாய் த்வயம் உபயத்தினுடையவும் அநுஷ்டாந

1. விசதமாக-திருமந்த்ரத்தில் மத்யமபதமான 'நம:' என்பது, அர்த்தபலத்தாலே உபாயத்வத்தைத் தெரிவிக்கும். இதன் விவரணமான த்வயத்தில் பூர்வகண்டத்தில் 'ஸ்ரீமந் நாராயண' என்கையாலே, அந்த உபாயம் ஸ்ரீவிசிஷ்டமென்று ஸ்பஷ்டமாகத் தெரியவந்தமை. இங்ஙனமே உபேயம் ஸ்ரீவிசிஷ்டமென்பதும் உத்தரவாக்யத்தில் 'ஸ்ரீமதே நாராயணாய' என்று இருக்கையால், விசதமாம். 2. மூன்று ப்ரபந்தங்கள்—ஸ்ரீயப்பதிப்படி, யாத்ருச்சிகப்படி, பரந்தபடி என்பன. 3. திருமந்த்ராநந்தரம்-திருமந்த்ர அர்த்தத்தை யருளிச்செய்த அநந்தரம்: 'சரமஶ்லோகத்தை' 'த்வயத்தை' என்பவற்றிற்கும் இப்படியே பொருள் காண்க. 4. சீயர்-யதிகேஸரி அழகிய மணவாளச்சீயர். 5. சரமஶ்லோகத்தில் 'ஶரணம் வ்ரஜ' என்று விதிக்கையாலும், த்வயத்தில் 'ஶரணம் ப்ரபத்யே' என்று அநுஷ்டாநத்தைச் சொல்லுகையாலும் 'சரமஶ்லோகம் விதி த்வயம் அநுஷ்டாந ரூபமானதென்பதும் ஏற்படும். 6. ஸ்வரூபத்தின் யாதாத்ம்யஜ்ஞாநம் பிறந்தவனுக்கு எம்பெருமானுடைய ஶேஷித்வ ஶரண்யத்வ ப்ராப்யத்வங்கள் நித்ய ப்ரார்த்தநீயங்களாகையாலே, அவற்றைத் தெரிவிக்கும் திருமந்த்ரம் ப்ராப்யபரமாம்.

ப்ரதிபாதகமாயிருக்கையாலும். 1. த்வயம் முன்னாக சரமச்லோகத்தைச்சொல்லுகிறது - திருமந்த்ரத்தில் மத்யமசதுர்த்தீபதங்களுக்கு வாக்யத்வயம் விவரணமாய், அது தனக்குச் சரமச்லோகத்தில் அர்த்தத்வயம் விவரணமாயிருக்கும் ஆகாரத்தாலே. 2. ஆனபின்பு, இரண்டு ப்ரகாரமும் அநுஸந்திக்கத் தடையில்லை. அதில் ஒருப்ரகாரத்தை மூன்று ப்ரபந்தத்திலும் அருளிச்செய்தவராகையாலே, மற்றைப்ரகாரத்தையும் அருளிச்செய்யவேணுமென்று திருவுள்ளம்பற்றி, திருமந்த்ரார்த்தம் அருளிச்செய்த அநந்தரம் த்வயார்த்தத்தை அருளிச்செய்கிறார்.

அவதாரிகை முற்றிற்று.



அதில் ப்ரதமத்திலே வைஷ்ணவனாயிருப்பானொருவனுக்கு ஸ்வாதிகாரானுரூபமாக அவஶ்யாபேக்ஷிதமாயுள்ளவற்றை, *ஸங்க்ரஹமாக அருளிச்செய்கிறார்.

(௧௧௫) புறம்புண்டான பற்றுக்களையடைய வாஸனையோடே விடுகையும், எம்பெருமானையே தஞ்சமென்று பற்றுகையும்,

(வ்யா.) 'புறம்புண்டான பற்றுக்களையடைய வாஸனையோடே விடுகை' என்று தொடங்கி ஒரு சூர்ணையாலே. புறம்புண்டான பற்

1. த்வயத்துக்கு முன்னே சரமச்லோகத்தைச் சொல்லுவதற்கு இரண்டு காரணங்கள் - விதிரூபமான சரமச்லோகத்தைச் சொல்லி, அதன் பின்பு அநுஷ்டானரூபமான த்வயத்தைச் சொல்லுவதென்பது ஒன்று, ப்ராப்யபரமான திருமந்த்ரத்தைச்சொல்லி, ப்ராபகபரமான சரமச்லோகத்தை அதன் பின்பு சொல்லி, அவ்விரண்டையும் சொல்வதான த்வயத்தை அதன் பின்பு வைத்ததென்பது - மற்றொன்று. 2 விவரணவிவரணிபாவத்தைப் பற்றித் திருமந்த்ரத்தின் பின் த்வயமும் அதன்பின் சரமச்லோகமும் அருளிச்செய்வது.

யிருக்கை. கீழ்ச்சொன்னவை யெல்லாம் உண்டானாலும் உண்டாக அரிதாயிருப்ப தொன்றிறே இது.

மூ.-திருமந்த்ரத்திலும் த்வயத்திலும் நியதனாகை யும், ஆசார்யப்ரேமம் கனத்திருக்கையும், ஆசார்யன்பக் கலிலும் எம்பெருயான்பக்கலிலும் க்ருதஜ்ஞனாய்ப் போருகையும்,

(வ்யா.) திருமந்த்ரத்திலும் த்வயத்திலும் நியதனாகை யாவது - மந்த்ராக்ஷரங்களினுடைய அருகே மறந்தும் போகாதே த்யாஜ்ய உபாதேயங்களைத் தெளிய அறிவிக்குந் திருமந்த்ரத்திலும் அதின் அர்த் தத்துக்கு விவரணமான த்வயத்திலும் நிஷ்டனாயிருக்கை.

ஆசார்யப்ரேமம் கனத்திருக்கை யாவது - கீழ்ச்சொன்ன ஆகா ரத்தையெல்லாம் உபதேசத்தாலே தனக்கு உண்டாக்கின ஆசார்ய விஷயத்தில் (௧௦௨) "யஸ்ய தேவே பரா பக்திர் யதா தேவே ததா குரௌ" [யஸ்ய தேவே பராபக்திர் யதா தேவே ததா குரௌ] என்கிறபடியே ப்ரேமம் அதிசயித்திருக்கை.

ஆசார்யன்பக்கலிலும் எம்பெருமான்பக்கலிலும் க்ருதஜ்ஞனாய்ப் போருகையாவது - நித்யஸம்ஸாரியான தன்னை நித்யஸூரிகள் பேற் றுக்கு அர்ஹனும்படி இரும்பைப் பொன்னாக்குவாரைப்போலே திருத்தின ஆசார்யன்பக்கலிலும், 1. அத்வேஷாதிகளை விளைத்துக் கொண்டுவந்து ஆசார்யவிஷயத்தோடே சேர்த்த எம்பெருமான் பக்க லிலும் உபகாரஸ்ம்ருதியுடையனாய்ப் போருகை.

மூ.-ஜ்ஞானமும் விரக்தியும் சாந்தியும் உடையனா யிருக்கும் பரமஸாத்விகரோடே ஸஹவாஸம் பண்ணு கையும், வைஷ்ணவாதிகாரிக்கு அவஶ்யாபேக்ஷிதம்.

(வ்யா.) ஜ்ஞானமும் விரக்தியும் சாந்தியு முடையனாயிருக்கும் பரம ஸாத்விகரோடே ஸஹவாஸம்பண்ணுகையாவது-தான் கலங்கின லும் கலங்காமல் நோக்குகைக்கு உறுப்பாகவும், கீழ்ச்சொன்ன ஆகா

1. எம்பெருமான் அத்வேஷாதிகளை விளைக்கும் ப்ரகாரத்தை ஸ்ரீவசந பூஷணத்திலே த்ரியாத்ஷ புதியிலே என்று தொடங்கிவிஸ்தரேண அருளிச் செய்திருத்தல் காண்க.

ரங்கள் தனக்கு 1. வர்த்திக்கைக்கு உறுப்பாகவும் 2. தத்வ யாதாத்ம்ய ஜ்ஞாநமும் அப்ராப்தவிஷயவிரக்தியும் இவை இரண்டும் தனக்குண்டென்று இறுமாப்பற்றிருக்கையாகிற ஸாந்தியும் உடையனாயிருக்கும் பரமைகாந்தித்வநிஷ்டனாயிருப்பான் ஒருபாகவதனோடே கூட வஸித்துப்போருகை.

'வைஷ்ணவாதிகாரிக்கு அவஸ்யாபேக்ஷிதம்' என்றது - இவையித்தனையும் வைஷ்ணவனென்றிருப்பான் ஒரு அதிகாரிக்கு அவஸ்யம் உண்டாகவேணு மென்கை.

இப்படியிருக்கும் இவனுக்கு அநுஸந்தாந விஷயம் வகுத்து அருளிச்செய்கிறார் மேல்

ஸூ. (௧௧௭) இந்த அதிகாரிக்கு ரஹஸ்யத்ரயமும் அநுஸந்தேயம்.

(வ்யா.) 'இந்த' என்று தொடங்கி. அதாவது—கீழ்ச்சொன்ன ஆகாரங்களையுடையனாயிருக்கும் இவ்வதிகாரிக்கு, அந்த ஜ்ஞாநாநுஷ்டாநங்களுக்கு வர்த்தகமான ரஹஸ்யத்ரயமும் அநுஸந்தாந விஷயமாகவேணு மென்கை.

இனி, த்வயத்திற் சொல்லுகிற அர்த்தத்தின் 3. வீறுடைமையை யறிவிக்கைக்காக, ஸாஸ்த்ரம் திருமந்த்ரம் சரமஸ்லோகம் இவற்றிற் சொல்லுகிற ப்ரகாரங்களை அருளிச் செய்துகொண்டுசென்று, பின்னை அதுதன்னை அருளிச்செய்கிறார்

ஸூ. (௧௧௮) எல்லாப்ரமாணங்களிலும் தேகத்தாலே பேறென்கிறது; திருமந்த்ரத்தில் ஆத்மாவாலே பேறென்கிறது; சரமஸ்லோகத்தில் ஈஸ்வரனாலே பேறென்கிறது; த்வயத்தில் பெரியபிராட்டியாலே பேறென்கிறது.

---

1. வர்த்திக்கை - வ்ருத்தியாகை. 2. தத்வ யாதாத்ம்யஜ்ஞாநம் - தத்வ விஷயத்தில் உண்மையான அறிவு. 3. வீறுடைமை - வேறொன்றுக்கு இல்லாத மேன்மையையுடையதாதல்.

(வ்யா.) 'எல்லா ப்ரமாணங்களிலும்' என்று தொடங்கி. அதாவது - சேதநனுடைய 1. விசிஷ்டவேஷத்திலே நோக்கான ஸகல சாஸ்த்ரங்களிலும், ஸாதநாநுஷ்டாநயோக்யமான தேஹத்தாலே இவனுக்குப் புருஷார்த்தலாபம் என்கிறது. 2. நிஷ்க்ருஷ்டவேஷத்திலே நோக்கான திருமந்த்ரத்தில், இவன் ஸ்வரக்ஷணத்தில் நின்றும் கைவாங்கினாலொழிய ஈஸ்வரனுடைய ரக்ஷகத்வம் ஜீவியாமையாலே, தத்ப்ரவ்ருத்திவிரோதி யான ஸ்வப்ரவ்ருத்தியை விட்டிருக்கும் ஆத்மாவாலே புருஷார்த்தலாபம் என்கிறது. ஈஸ்வர ஸ்வாதந்த்ர்யத்திலே நோக்கான சரமஸ்லோகத்தில், இவனுடைய ஸ்வீகாரமும் மிகையாம்படி, தானே கைக்கொண்டு, ப்ராப்திப்ரதிபந்தக ஸகல பாபங்களையும் தள்ளிப்போகட்டு, தன்திருவடிகளிலே சேர்த்துக் கொள்ளும் ஈஸ்வரனாலே புருஷார்த்தலாபம் என்கிறது. ஈஸ்வரனுடைய லக்ஷ்மீவிசிஷ்ட வேஷத்திலே நோக்கான த்வயத்தில், விசேஷணபூதையான பெரியபிராட்டியாராலே புருஷார்த்தலாபமென்கிறதென்கை.

'உபாயம் ஈஸ்வரனாயிருக்க, இவளாலே பேறாகையாவதென்?' என்கிற சங்கையில் அருளிச்செய்கிறார்

சூ.-(கககூ) பெரியபிராட்டியாராலே பேறாகையாவது- இவள் புருஷகாரமானாலல்லது ஈஸ்வரன் கார்யஞ் செய்யானென்கை.

(வ்யா.) 'பெரிய பிராட்டியாராலே' என்று தொடங்கி. அதாவது - 3. இஷ்டாநிஷ்ட ப்ராப்தி பரிஹாரங்கள் இரண்டும் பண்ணுவான் ஈஸ்வரனேயாயிருக்கப் பெரியபிராட்டியாராலே இவனுக்குப் பேறாகை ஆகிறது, இவனுடைய அபராதத்தைப் பாராதே ரக்ஷிக்கும்படி இவள் புருஷகார மானால் ஒழிய, ஈஸ்வரன் இவன்கார்யஞ்செய்யான் என்றபடி என்கை.

கீழ், ஸாமாந்யத்திலே வைஷ்ணவாதிகாரிக்கு அபேக்ஷிதங்களிறே சொல்லிற்று; விசேஷித்து த்வயத்துக்கு அதிகாரியாமவனுக்கு அபேக்ஷிதத்தை அருளிச்செய்கிறார்

1. விசிஷ்டவேஷம் - சரீரத்தோடு கூடியுள்ளநிலை. 2. சேதநனுடைய நிஷ்க்ருஷ்ட வேஷம்-சேஷத்வ பாரதந்த்ர்யங்கள். 3. இஷ்டாநிஷ்டப்ராப்தி பரிஹாரங்கள் - இஷ்டப்ராப்தி அநிஷ்ட பரிஹாரம்.

சூ.-(கஉ௦) த்வயத்துக்கு அதிகாரி-ஆகிஞ்சந்யமும் அநந்யகதித்வமும் உடையவன்.

(வ்யா.) 'த்வயத்துக்கு' என்று தொடங்கி. அதாவது—ஸித்தோபாயவரண ப்ரதிபாதகமான த்வயத்துக்கு அதிகாரி ([illegible]) "[illegible]" [அகிஞ்சநோகதி: த்வமேமேவோபாய பூதோமேபவ] ([illegible]) "[illegible]" [அகிஞ்சநோநந்யகதிஶ்ஶரண்ய] என்றும், * "புகலொன்றில்லா அடியேன்" என்றும் சொல்லுகிறபடியே 1. ஆகிஞ்சந்யமும் 2. அநந்யகதித்வமும் ஆகிற இரண்டும் உடையவன் என்கை.

'இவையிரண்டின் வேஷமுந்தான் எங்ஙனே'? என்ன, அருளிச்செய்கிறார்

சூ.—(கஉக) இவை இரண்டும் ப்ரபந்நபரித்ராணத்திலே சொன்னோம்.

(வ்யா.)'இவையிரண்டும்' என்று தொடங்கி. அதாவது—உபாயாந்தர ராஹித்யமாகிற ஆகிஞ்சந்யத்தின் வேஷமும், ரக்ஷகாந்தரராஹித்யமாகிற அநந்யகதித்வத்தின் வேஷமும் ப்ரபந்நபரித்ராணமாகிற ப்ரபந்தத்திலே ஸுஸ்பஷ்டமாகச் சொன்னோம், அதிலே கண்டுகொள்வது என்கை.

இனி த்வயத்துக்கு வாக்யார்த்தம் அருளிச்செய்கிறார்

சூ.—(கஉஉ) இதில் முற்கூற்றால் பெரிய பிராட்டியாரை முன்னிட்டு ஈஶ்வரன் திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறது; பிற்கூற்றால், அச்சேர்த்தியிலே அடிமையிரக்கிறது.

(வ்யா.) 'இதில் முற்கூற்றால்' என்று தொடங்கி. அதாவது - இந்தத்வயத்தில் பூர்வகண்டத்தாலே 'ஸ்ரீமத்' என்று பெரியபிராட்டி

1. ஆகிஞ்சந்யம் - உபாயாந்தரம் இல்லாமலிருக்கை, 2. அநந்ய கதித்வம் - ரக்ஷகாந்தரமில்லாதிருக்கை.

* திருவாய் ௬-௰-௰.

யாரை முன்னிட்டு, 'நாராயணசரணௌ' என்று ஈஶ்வரன் திருவடிகளை 'ஶரணம் ப்ரபத்யே' என்று உபாயமாகப் பற்றுகிறது. உத்தரகண்டத்தாலே 'ஶ்ரீமதே' என்று பெரியபிராட்டியாரும் அவனுமான சேர்த்தியிலே, 'நாராயணாய' என்கிற சதுர்த்தியாலே கைங்கர்யத்தை அர்த்திக்கிறது என்கை. 'நமஸ்ஸால்' கைங்கர்ய விரோதி நிவ்ருத்தி ப்ரதிபாதகமாகையாலே, அடிமையை இரக்கிறது என்ற இதிலே அந்தர்ப்பூதம்.

இனி ப்ரதிபதம் அர்த்தம் அருளிச்செய்வதாகத் திருவுள்ளம் பற்றி, ஶ்ரீபதத்தின் அர்த்தம் அருளிச்செய்ய உபக்ரமிக்கிறார்

ஸூ.—(கஉகூ) ஶ்ரீ என்று பெரிய பிராட்டியாருக்குத் திருநாமம்.

(வ்யா.)—'ஶ்ரீ என்று பெரியபிராட்டியாருக்குத் திருநாமம்' என்று. ஶ்ரீஶப்தம் ஸம்பதாதிகளுக்கும் வாசகமாக லோகத்திலே 1. நடந்துபோரக் காண்கையாலே, அத்தை வ்யாவர்த்திக்கைக்காக 'ஶ்ரீ என்கிற இது பெரியபிராட்டியார்க்குத் திருநாமம்' என்கிறார். ஆகையிறே, *"லக்ஷ்மீ: பத்மாலயா பத்மா கமலா ஶ்ரீர்ஹரிப்ரியா" என்று, திருநாமங்களோடே ஸஹபடிதமாயிற்று. இதுதான் எல்லாத் திருநாமங்களும்போலன்றிக்கே, (கஉ) "[illegible]" [ஶ்ரீரிதி ப்ரதமம் நாம லக்ஷ்ம்யா:] என்கிறபடியே, இவளுக்கு 2. ப்ரதமாபிதானமாயிருக்கும். (கஉ) "[illegible]" [அ இதி பகவதோ நாராயணஸ்ய ப்ரதமாபிதானம்] என்று அகாரம் ஈஶ்வரனுக்கு ப்ரதமாபிதானமானாற்போலேயாயிற்று, இவளுக்கும் ப்ரதமாபிதானமாயிருக்கும்படி. அது, அவனுடைய ரக்ஷகத்வத்துக்கு 3. ஏகாந்தமான ஸ்வபாவங்களைச் சொல்லக்கடவதாயிருக்கும்; இது, இவளுடைய புருஷகாரத்வத்துக்கு ஏகாந்தமான ஸ்வபாவங்களைச் சொல்லக்கடவதாயிருக்கும்.

1. நடந்து போருதல் - வழங்குதல். 2. ப்ரதமாபிதானம் - முதன்மையான பெயர். 3. ஏகாந்தமான - அவஶ்யம் வேண்டிய.

* அமர-நிக-கா - க, க - வ. ஶ்லோ-உள.

இனி, இந்த ஸ்ரீசப்தத்துக்கு அர்த்தம் அருளிச்செய்வதாக ப்ரதமம் இதன்மேல் வந்த வ்யுத்பத்தித்வயத்தை அருளிச்செய்கிறார்

ஸூ.—(௧௨௪) ஶ்ரீயதே, ஶ்ரயதே.

(வ்யா.)—'ஶ்ரீயதே, ஶ்ரயதே' என்று. அதாவது - *“ஶ்ரிஞ் ஸேவாயாம்” என்கிற தாதுவிலே 'ஶ்ரீயத இதி ஶ்ரீ:, ஶ்ரயத இதி ஶ்ரீ:' என்று ஸித்தமான கர்மணிவ்யுத்பத்தியையும் கர்த்தரிவ்யுத்பத்தியையும் சொன்னபடி.

இவ்யுத்பத்தித்வயத்துக்கும் அர்த்தம் அருளிச்செய்கிறார்

ஸூ.—(௧௨௫) இதுக்கு அர்த்தம்-எல்லார்க்கும் இவளைப்பற்றி ஸ்வரூபலாபமாய், இவள்தனக்கும் அவனைப்பற்றி ஸ்வரூபலாபமாயிருக்கும் என்று.

(வ்யா.)—'இதுக்கு அர்த்தம்' என்று தொடங்கி. அதாவது - இவ் 1. உபயவ்யுத்பத்திக்கும் அர்த்தம் 'ஶ்ரீயதே' என்று எல்லாராலும் ஸேவிக்கப்படாநின்றாள் என்கையாலே ஸகல சேதநர்க்கும் இவளைப் பற்றித் தங்களுடைய சேஷத்வரூப ஸ்வரூபலாபமாய், 'ஶ்ரயதே' என்று ஈஶ்வரனை ஸேவியாநின்றாள் என்கையாலே, இவள்தனக்கும் ஈஶ்வரனைப்பற்றித் தன்னுடைய ஸ்வரூபலாபமாயிருக்குமென்று என்கை. இவள்தனக்கு, சேதநவிஷயத்தில் சேஷித்வமும் ஈஶ்வரவிஷயத்தில் சேஷத்வமும் என்றும் உண்டாயிறே யிருப்பது. ஆகையால், இந்த சேஷித்வசேஷத்வங்கள் இரண்டும் இவளுக்கு நித்யமாய்ச் செல்லாநிற்கும்.

'ஈஶ்வரனுக்கு உபாயத்வமும் உபேயத்வமுமாகிற ஆகாரத்வயம் உண்டானாற்போலே, இவளுக்கும் 2. புருஷகாரத்வமும் ப்ராப்யத்வமுமாகிற ஆகாரத்வயமும் உண்டாகையாலே, இதில் எவ்வாகாரத்தைத் நினைத்து இவளை 3. இப்போது சொல்லுகிறது?' என்ன, அருளிச்செய்கிறார்

1. உபயவ்யுத்பத்தி - கர்மணிவ்யுத்பத்தி கர்த்தரிவ்யுத்பத்தியென்ற இரண்டு வகையான வ்யுத்பத்தி. 2. புருஷகாரத்வம் - கர்த்தரிவ்யுத்பத்தியில் தோன்றும். 3. இப்போது - ஈஶ்வரனை உபாயமாகப்பற்றுகிற இச்சமயத்தில்.

*தா - ப்வாதி.

**மூ.—(கஉசு) இப்போது இவளைச் சொல்லுகிறது புருஷகாரமாக.**

(வ்யா.)—'இப்போது இவளைச் சொல்லுகிறது புருஷகாரமாக' என்று. 'புருஷகாரமாக' என்கையாலே, உபாயவஸ்து விசேஷணமாயிருக்கிற ஆகாரத்தையிட்டு, இவளுக்கும் உபாயத்வத்தில் அந்வயம் சொல்லும் பக்ஷம் நிரஸ்தம்.

'ஈச்வரனுடைய நாராயணத்வ ப்ரயுக்தமான ஸ்வாபாவிக ஸம்பந்தாதி ஜ்ஞாநத்தை யுடையனாய்க் கொண்டு, அவனை ஆச்ரயிக்கிற இச்சேதநனுக்கு இவளைப் புருஷகாரமாக முன்னிடவேண்டுகிறது தான் என்?' என்ன, அருளிச்செய்கிறார்

**மூ.—(கஉஎ) நீரிலே நெருப்புக் கிளருமாபோலே குளிர்ந்த திருவுள்ளத்திலே அபராதத்தால் சீற்றம் பிறந்தால் பொறுப்பது இவளுக்காக.**

(வ்யா.) 'நீரிலே' என்று தொடங்கி. அதாவது - சீதலமான ஜலத்திலே சென்று அனுகவொண்ணாதபடியான நெருப்புக் கிளருமாபோலே, (கOஎ) "ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்" [ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்] (கOஅ) "ஸமோஹம் ஸர்வபூதேஷு" [ஸமோஹம் ஸர்வபூதேஷு] என்கிறபடியே, 1 ஸர்வபூத ஸுஹ்ருத்த்வம் 2 ஸமாச்ரயணீயத்வே ஸமத்வமாகிற ஸ்வபாவவிசேஷங்களாலே ப்ரஸந்நமாய்க் குளிர்ந்திருக்கிற திருவுள்ளத்திலே (கOகூ) "பரிபூர்ணகலி ஜநே ஹிதஸ்ரோதோவ்ருத்யா பவதி ச கதாசித் கலுஷதீ:" [பரிபூர்ணகலி ஜநே ஹிதஸ்ரோதோவ்ருத்யா பவதி ச கதாசித்கலுஷதீ:] என்கிறபடியே, சேதநன் 3 நிரக்கழியப்பண்ணின அபராதம் 4 அடியாக (ககO) "க்ஷிபாமி" [க்ஷிபாமி] "நக்ஷமாமி" [நக்ஷமாமி] என்னும்படியான சீற்றம் பிறந்தால் அவ்வபராதத்தைப் பொறுப்பது (ககக) "கிமேதந் நிர்தோஷ: க இஹ ஜகதி" [கிமேதந நிர்த்

1. ஸர்வபூத ஸுஹ்ருத்த்வம் - எல்லாப்பிராணிகளிடத்திலும் ஸ்நேஹங் கொண்டிருக்கை. 2. ஸமாச்ரயணீயத்வே ஸமத்வம் - எல்லாராலும் ஒப்ப ஆச்ரயிக்கத் தக்கவனாயிருக்கை. 3. நிரக்கழிய - பூர்ணமாக என்றபடி. 4. அடியாக - காரணமாக.

தோஷ꞉க இஹஜகதி] இத்யாதிப்படியே தன்னுடைய உபதேசாதிகளாலே அச்சிற்றத்தையாற்றித் தயையைஜநிப்பிக்கும் இவளுக்காக என்கை. ஆகையாலே, ஸம்பந்தஜ்ஞாநம் பிறந்தவனுக்கும் அபராதபயத்தாலே 1 புருஷகாரபுரஸ்கரணம் அபேக்ஷித மென்று கருத்து.

2 'இத்தலையிற் கார்யம் ஏறிட்டுக்கொண்டும் அத்தலையை வசீகரித்தும் இரண்டு தலையையும் பொருத்துகைக்கு இவள்தான் 3 கண்ணழிவற்ற 4 புருஷகாரமோ?' என்ன, அருளிச்செய்கிறார்

மூ.—(௧௨௮) இவள் தாயாய், இவர்கள் க்லேசம் பொறுக்கமாட்டாதே அவனுக்குப் பத்நியாய், இனிய விஷயமாயிருக்கையாலே கண்ணழிவற்ற புருஷகாரம்.

(வ்யா.) 'இவள் தாயாய்' என்று தொடங்கி. அதாவது - (௧௧௨) "த்வம் மாதா ஸர்வலோகாநாம்" [த்வம் மாதாஸர்வலோகாநாம்] என்றும், (௧௧௩) "அகிலஜகந்மாதரம்" [அகிலஜகந்மாதரம்] என்றும் சொல்லுகிறபடியே இச்சேதநர்க்கு இவள் மாதாவாய், *"தந்தம் மக்க ளழுதுசென்றால் தாய்மாராவார் தரிக்ககில்லார்" என்கிறபடியே அந்த ஸம்பந்தமடியாக இவர்களுடைய க்லேசங் கண்டால் ஸஹிக்கமாட்டாதே, (௧௧௪) "விஷ்ணுபத்நீ" [விஷ்ணுபத்நீ] என்கிறபடியே அவனுக்குப் பத்நியாய், †"பித்தர் பனிமலர்மேற்பாவைக்கு" என்கிறபடியே அவன் 5 தன் வைலக்ஷண்யத்தைக் கண்டு பிச்சேறித் தன்சொல்வழி நடக்கும்படி 6 அபிமதவிஷயமா யிருக்கையாலே, கண்ணழிவற்ற புருஷகார மென்கை.

---

1. புருஷகார புரஸ்கரணம் - புருஷகாரத்தை முன்னிடுகை. 2. இத்தலையிற் கார்யம் ஏறிட்டுக்கொண்டும் - சேதநனுடைய காரியத்தைத் தன்மேற் போட்டுக்கொண்டும். அத்தலையை - ஈச்வரனை. 3. கண்ணழிவற்ற - நிர்த்தோஷமான. 4. புரு ஸநோதி - மிகுதியாகத் தருகிறான் என்று புருஷ꞉ என்பதன் பொருள் : இங்கே, புருஷகாரம்—(ஈச்வரனைச் சேதனன் விஷயத்தில்) மிகுதியாகக் கொடுக்கும்படி செய்பவள். 5. தன் வைலக்ஷண்யத்தை - பிராட்டியான தன்னுடைய விலக்ஷணமான [வேறொருவர்க்கில்லாத] வடிவழகை. 6. அபிமதவிஷயம் - இஷ்டமான பொருள்.

*பெரியாழ் - ௨, ௨, ௩. †திருநெடுந் ௧௮.

‘எல்லாம் செய்தாலும் 1 நிரங்குசஸ்வதந்த்ரனை ஈச்வரன், சேதநருடைய அபராதங்களை 2 நிறுத்து அறுத்துத் தீர்த்துவன் என்று நிற்குமளவில், இவளாலே பொறுப்பிக்கப்போமோ?’ என்ன, அருளிச்செய்கிறார்

**சூ.—(கஉக) திருவடியைப் பொறுப்பிக்குமவள், தன் சொல்வழி வருமவனைப் பொறுப்பிக்கச் சொல்ல வேண்டாவிறே.**

(வ்யா.)—‘திருவடியை’ என்று தொடங்கி. அதாவது - தன்னைப் பத்துமாஸம் 3 தர்ஜநபர்த்ஸநம் பண்ணின ராக்ஷஸிகளுடைய அபராதங்களைக் கணக்கிட்டு, சித்ரவதம் பண்ண 4 உத்யோகித்து நின்ற 5 சொல்மிறுங்கனான திருவடியையு முட்பட (ககரு) “[illegible]” [க்ருப்யேத்] என்றும், (கககூ) “[illegible]” [நகஸ்சிந்நாபராத்யதி] என்றும் இத்யாதி உபதேசத்தாலே பொறுப்பிக்குமவள், * “மலராள் தனத்துள்ளான்” என்றும், † “மாமலர்மங்கை மணநோக்கமுண்டான்” என்றும், ‡ “அல்லிமலர்மகள் போகமயக்குக்களாகியும் நிற்கும்” என்றும் சொல்லுகிறபடியே தன் போக்யதையிலே குமிழிநீருண்டு, § “நின்னன்பின் வழி நின்று சிலைபிடித்து எம்பிரானேக.” என்கிறபடியே மாயாம்ருகத்தின் பின்னே போ என்னிலும் 6 விளைவது அறியாதே அதன்பின்னே போம்படி தன்சொல்வழி வருமவனைப் பொறுப்பிக்க வல்லளென்னுமிடம் கிம்புநர்ந்யாயஸித்தமிறே யென்கை. ¶ “செய்தகவினுக் கில்லை கைம்மாறு” என்னும்படி, இரண்டு தலைக்கும் 7 தலைதடுமாறாக உபகரித்துத் தன்

1. நிரங்குசஸ்வதந்த்ரன் - தடைப்படாத ஸ்வாதந்த்ரியமுள்ளவன். 2. நிறுத்து அறுத்து தீர்த்துவன் - கணக்கிட்டு அநுபவிக்கச்செய்தே தீர்ப்பேன். 3. தர்ஜநம் - மருட்டுகை, பர்த்ஸநம் - பழிக்கை. 4. உத்யோகித்து - ப்ரயத்னங்கொண்டு. 5. சொல்மிறுங்கன் - சொல்லை மீறுந் தன்மையான் : அடங்காத் தன்மையுள்ளவனென்றபடி. 6. விளைவது - மேல் நடக்கப்போவது: ஸீதாபஹாரம். 7. தலைதடுமாறாக - (ஸ்வரூபஹாநிவாராமல்) மாறிமாறி என்றபடி.

* மூன்றாந் திரு, வந் - ரு.
† பெரிய திரு - அ, க0, க.
‡ திருவாய் - ரு, க0, அ.
§ பெரியாழ். தி - ரு, க0, எ.
¶ பெரிய திரு - ரு - அ, உ.

சொல்வழி போகவேண்டும்படியான திருவடியோடே [1] மறுதலிக்குமவள், * ‘‘தான் [2] முயங்கும்’’ என்னும்படியான போக்யதைக்குத் தோற்று ‘எத்தைச் செய்வோம்?’ என்று [3] தலைதடுமாறி, † ‘‘நின்னன்பின் வழிநின்று’ ‡ ‘‘அதனின்பின்னே படர்ந்தான்’’ என்னும்படி விலைவதறியாதே முறுவலுக்குத் தோற்றுச் சொல்வழிபோமவனைப் பொறுப்பிக்குமென்னு மிடஞ் சொல்லவேண்டாவிறே’’ § என்று இதுதன்னை இவர் திருத்தம்பியாரும் அருளிச்செய்தாரிறே.

ஆக, ஸ்ரீமத்பதத்தில் 4. ப்ரக்ருத்யம்ஶத்தை அருளிச்செய்தார் கீழ்; 5. ப்ரத்யயாம்ஶத்தை அருளிச்செய்கிறார் மேல்

**சூ.—(கரு௰) மதுப்பாலே இருவர்சேர்த்தியும் நித்யமென்கிறது.**

(வ்யா.) ‘மதுப்பாலே’ என்று தொடங்கி. அதாவது—இம் மதுப்புத்தான் 6. நித்யயோகே மதுப் பாகையாலே, இத்தால் புருஷகாரபூதையான பிராட்டியும் ஈஶ்வரனுமான இருவருடைய சேர்த்தியும் எப்போதுமுண்டு என்னுமிடம் சொல்லுகிற தென்கை.

இந்நித்யயோகத்தை உபபாதிக்கிறார்

**சூ.—(கருக) இவளோடே கூடியே வஸ்துவினுடைய உண்மை.**

(வ்யா.) ‘இவளோடேகூடியே வஸ்துவினுடைய உண்மை’ என்று. அதாவது—(ககஎ) ‘‘ஸ்ரீய꞉பதி நிகிலஹேய ப்ரத்யநீக கல்யா

---

1. மறுதலிக்குமவள் - எதிரிடுபவள். 2. முயங்கும் - அணைக்கப்பெற்ற. 3. தலைதடுமாறி - கலங்கி. 4. ப்ருக்ருதி - பகுதி; ‘ஸ்ரீ’ என்பது. 5. ப்ரத்யயம் - விகுதி; ‘மத்’ என்பது. 6. ‘‘ஸஹஶ்ரீ நித்யா ப்ரஸாதாஸு நித்யயோகே ஸ்திராயதே ஸம்பந்தே ஸ்துதி விவக்ஷாயாம் ஸவந்தி மதுப்ப்ரத்யயா꞉’’ என்ற காரிகையால் மதுப்புக்கு ஏழர்த்தமுண்டு என்றும், அதில் நித்ய யோகம் என்பது ஒன்று என்றும் ஏற்படும்; நித்யயோகம் - எப்போதுமான சேர்க்கை.

* மூன்றாந்திரு-அந்-க௦௦. ‡ பெரியதிருமொழி-உ, ரு, சு.
† பெரியாழ். திரு-ரு, க௦, எ. § அருளிச்செயல் ரஹஸ்யம்.

ணைகதாந: ஸ்வேதரஸமஸ்தவஸ்துவிலக்ஷணாநந்தஜ்ஞாநாநந்தைகஸ்வரூப:" [ஸ்ரிய:பதிர் நிகிலஹேயப்ரத்யநீககல்யாணைகதாநஸ் ஸ்வேதரஸமஸ்த வஸ்துவிலக்ஷணாநந்த ஜ்ஞாநாநந்தைகஸ்வரூப:] என்று ஸ்வரூபநிரூபகமான ஜ்ஞாநாநந்தாதிகளுக்கு முன்னே ஸ்ரிய:பதித்வத்தைச் சொல்லும்படி அவன் ஸ்வரூபத்துக்கு ப்ரதாநநிரூபகையாயிருக்கையாலே, இவளோடேகூடியே வஸ்துவினுடைய ஸத்பாவம் இருப்பது என்கை.

ஆக, 1 ஸ்வரூபாநுபந்தித்வ ப்ரயுக்தமான நித்யயோகத்தை அருளிச்செய்தாராயிற்று.

இனி, இவளுடைய குணப்ரயுக்தமான நித்யயோகத்தை அருளிச்செய்கிறார்

மூ.—(௧௫௨) ஈஶ்வர ஸ்வாதந்த்ர்யத்தையும் சேதநனுடைய அபராதத்தையுங் கண்டு அகலமாட்டாள்.

(வ்யா.) 'ஈஶ்வரஸ்வாதந்த்ர்யத்தையும்' என்று தொடங்கி. அதாவது - அபராதங்களைப் பத்தும் பத்தாகக் கணக்கிட்டு, *அறுத்து அறுத்துத் தீர்க்கும் ஈஶ்வரஸ்வாதந்த்ர்யத்தையும், (௧௧௮) "யத்ப்ரஹ்மகல்பநியுதாநுபவேப்யநாஶ்யம்" [யத்ப்ரஹ்மகல்பநியுதாநுபவேப்யநாஶ்யம்] இத்யாதிப்படியே காலதத்வமுள்ளதனையும் அநுபவியாநின்றாலும் 2 சிறிதுவரையிட்டுக் காட்டக் கடவதல்லாதபடி பண்ணிவைத்த இச்சேதநனுடைய 3 அக்ருத்யகரணாத்யபராதங்களையுங் கண்டு, "என்னாகப்புகுகிறதோ!" என்னும் பயத்தாலே, ஈஶ்வரனைவிட்டு ஒரு க்ஷணகாலமும் அகலமாட்டாளென்கை.

இத்தால், சேதநனுக்குப் பலிக்குமத்தை அருளிச்செய்கிறார்

மூ.—(௧௫௩) சேதநனுக்கு இவையிரண்டையும் நினைத்து அஞ்சவேண்டா.

---

1. ஸ்வரூப அநுபந்தித்வம் - (ஸ்வரூபநிரூபகையாம்படி) ஸ்வரூபத்தோடு சேர்ந்திருக்கை. 2. சிறிதுவரையிட்டு - சிறிது குறைந்தவளவு கொண்டு. 3. அக்ருத்யகரணம் - செய்யத்தகாத தொழிலை [பாபத்தை]ச் செய்கை.

* நிறுத்தறுத்துத் தீர்க்கும் என்றும் பாடம்.

(வ்யா.) 'சேதநனுக்கு' என்று தொடங்கி. அதாவது-இப்படி இவள் இருந்து நோக்குகையாலே, சேதநனுக்கு, ஈஶ்வரஸ்வாதந்த்ர்யமும் ஸ்வாபராதமுமாகிற இவை இரண்டையும் நினைத்து 'என்னை விலையப்புகுகிறதோ' என்று அஞ்சவேண்டா என்கை.

இனி, இம்மிதுனத்தின் தாத்பர்யாம்ஶத்தை அருளிச்செய்கிறார்

சூ.—(௧௩௪) இத்தால் - ஆஶ்ரயிக்கைக்கு ருசியே வேண்டுவது, காலம் பார்க்கவேண்டா என்கிறது.

(வ்யா.) 'இத்தால்' என்று தொடங்கி. அதாவது - இப்படி 1. புருஷகார உபாய வஸ்துக்களினுடைய நித்யயோகத்தை ப்ரதிபாதிக்கிற இம்மிதுனத்தால், இவ்விஷயத்தை யாஶ்ரயிப்பார்க்கு, ஆஶ்ரயிக்கையில் ருசியே வேண்டுவது, 'இரண்டுதலையுங் கூடியிருக்குந் தசையிலே ஆஶ்ரயிக்கவேணுமே' என்று, ஆஶ்ரயணத்துக்குக் காலம் பார்த்திருக்கவேண்டா வென்கிற தென்கை.

இனி, இவள் புருஷகாரத்வத்தின் அவஶ்யாபேக்ஷிதத்வத்தை அறிவிக்கைக்காக, இவள் ஸந்நிதிக்கும் அஸந்நிதிக்கும் உண்டான வாசியை அருளிச்செய்கிறார்

சூ.—(௧௩௫) இவள் ஸந்நிதியாலே காகம் தலை பெற்றது; அது இல்லாமையாலே ராவணன் முடிந்தான்.

(வ்யா.) 'இவள் ஸந்நிதியாலே' என்று தொடங்கி. (௧௩௩) "ஜெவ்ராஜா ரூணரூபஞ்வையா" [தேவ்யா காருண்யரூபயா] என்கிறபடியே, 2 க்ருபைதான் ஒருவடிவு கொண்டாற்போலே இருப்பாளாய், ஸ்வதந்த்ரனை ஈஶ்வரனுக்கும் ஸ்வாதந்த்ர்யத்தை யழுக்கி க்ருபையைக் கிளப்புமவளான இவள் ஸந்நிதியாலே,

1 புருஷகாரவஸ்து - பிராட்டி; உபாயவஸ்து - ஈஶ்வரன் 2 காருண்யம்-ஏவ-ரூபம்-யஸ்யா:ஸா-காருண்யரூபா என்றும் காருண்யம் ரூபயதி இதி - 'காருண்யரூபா' என்றும், 'காருண்ய-ரூபா' என்பதற்கு இரண்டு ஸமாஸம் உண்டு: அதன்மேல் த்ருதீயாவிபக்த்யந்தம் காருண்யரூபயா என்று ஆயிற்று முதல் ஸமாஸத்துக்குப் பொருள் - காருண்யமே ஆகாரமானவள் என்பது: அதை க்ருபைதான் ஒரு வடிவுகொண்டாற்போலே இருப்பாளாய் என்று விவரிக்கிறார். இரண்டாவது ஸமாஸத்தின் பொருள் - காருண்யத்தைக் கிளப்புபவள் என்பது.

